



॥ श्रीः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

ஸர்வ வேதாந்த தாத்பர்ய ஸங்க்ரஹமான

ஸ்ரீமத்

# ரஹஸ்யத்ரய ஸாரம்.





திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
ஸ்ரீ உப. வே. நரஸிம்மாசார்ய ஸ்வாமிகளால்
எளிதான தமிழ் நடையில்
எழுதப்பட்ட வ்யாக்யானத்துடன் கூடியது





Komaleshwaran pett.
சென்னை, கோமளேசுவரன் பேட்டை — Chennai
ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ப்ரசாரண ஸபை
Prachana Saba

1920

दासोहमर्पयामि त्रय्यन्ताचार्य चरणराजीवे ।
व्याख्यां नृसिंह नामा महित रहस्यत्रयस्यसारस्य ॥

# முகவுரை.

வேதம், வேதாந்தம், ஆகமம், இதிஹாஸம், புராணம், ஸூத்திரம், திவ்ய பிரபந்தம், ஆசார்ய ஸ்ரீ ஸூக்திகள் முதலிய பல முகங்களால் வெளியிடப்பட்டிருக்கும் அத்யாத்ம சாஸ்திர ஸம்பிரதாயமென்னும் ஸ்ரீ விசிஷ்டாத்வைத வேதாந்தமதத்தை அந்தணரந்தியெல்லையுள் நின்ற அனைவரும் உணர்ந்து ஆஸ்திகர்களாய்ப் போந்து கடைத்தேறும் பொருட்டுக் கடல்கடைந் தமுதங்கொண்டாற்போல் அத்யாத்ம சப்தராசிகளென்னும்படியான ஸம்ஸ்க்ருத த்ராவிடரூபங்களான உபயவேதாந்தங்களினுடையவும் ஸாரதமாம்சங்களைத் திரட்டி பிரமாணங்களோடு மிகுதி குறைவற ச்ரோதவ்ய சேஷமில்லாதபடி எளிய மணிப்ரவாள நடையில் ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்திருக்கும் **ஸ்ரீமத்** ரஹஸ்யத்ரயஸார மென்னும் இந்நூலை ஆஸ்திகர்கள் யாவரு மறிவார்கள். காலவைகுண்யத்தால் இவ்வருமையான கிரந்தம் ப்ரசாரத்திலிருந்து மறைந்து வருவதையும், இதன் பொருளையும் பெருமையையும் எளிதாய் விளக்கும்படியான தமிழ் வ்யாக்யான மொன்று மிகவும் அவச்யமென்பதையும் கணிசித்துச் சில ஆஸ்திகர்கள் நியமித்ததை முன்னிட்டு இக்ரந்த ப்ரசாரணமாகிற கைங்கர்யத்தை ஆரம்பித்தோம்.

இதற்கு உற்சாகத்துடன் முதலில் இந்த ஸபையின் அத்யக்ஷரான திருவல்லிக்கேணியிலிருக்கும் ஸ்ரீ உப. ராஜமன்னார்கோவில் ஈயுண்ணி எஸ். ராஜகோபாலாசார்யார் ஸ்வாமி முன் வந்து ரூ.500 கொடுத்துதவியதும், அதன்பின் இதனடியில் கண்டிருக்கும் ஸ்ரீமான்களும் விசேஷமாக உபகரித்ததும், ஸ்ரீ உப. வே. திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத் விஷயம் நரஸிம்மாசார்ய ஸ்வாமிகள் இந்த க்ரந்தத்துக்கு ஆசார்யாதி ஸம்மதமான இந்த எளிய வ்யாக்யானத்தை

இயற்றி அதை ஸ்வயம்ப்ரயோஜனமாக நமக்களித்து இக்கைங்கர்யத்தைத் தலைக்கட்டிக் கொடுத்ததும், ஸர்வஸுஹ்ருத்தான சரண்யனுடையவும் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனுடையவும் அனுக்ரஹ விசேஷங்களென்பதற்கு ஸந்தேஹமில்லை. இவர்களெல்லோருக்கும் அடியோங்களுடைய ப்ரணாமத்தை இதன் மூலமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## த்ரவ்ய ஸஹாயம் செய்து உதவி புரிந்தவர்களின் திருநாமங்கள்.

—*—

ஸ்ரீ. உப. ஈயுண்ணி எஸ். ராஜகோபாலாசார்யார், புரொப்ரைட்டர், எஸ். ஆர். சாரி அன்டு கம்பெனி, மதராஸ் ... ... ... 500

,, சேட்லூர் வித்வான் பகவத் விஷயம் நரஸிம்மாசார்யார் (சிஷ்யர்கள்) ... ... 250

கோமடம் ஸ்ரீநிவாஸய்யங்கார் ... 25
களத்தூர் ராகவாசார்யார் ... 30
அரும்புலியூர் வேதம் சேஷாசார்யார் ... 30
அரும்புலியூர் கௌடி ஸ்ரீநிவாஸாசார்யார் 25
வீரவல்லி ஸ்ரீநிவாஸாசார்யார் ... 25
கங்கையாடி ராமய்யங்கார் ... 15
நடாதூர் ஸுந்தராசார்யார் ... 25
கோமடம் ரங்கஸ்வாமி அய்யங்கார் ... 10
காளி ஸ்ரீநிவாஸாசார்யார் ... 10
சில்லரை வஸூல் ... 55

,, டி. நரஸிம்மய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், திருவல்லிக்கேணி ... ... ... 100

,, ஸர் வி. ஸி. தேசிகாசார்யார், மைலாப்பூர் ... 50

,, ராவ் பஹதூர் என். ஸி. ராஜகோபாலாசார்யார், எழும்பூர் ... ... ... 50

,, ராவ் ஸாஹெப் வி. டி. கிருஷ்ணமாசார்யார், விஜயநகரம் ... ... ... 25

| | | |
|---|---|---|
| ஸ்ரீ உப. | கே. கோவிந்தாசார்யார், பெஸ்டு அண்டு கம்பெனி, மதராஸ் ... ... ... | 50 |
| ,, | வி. ஸி. சேஷாசார்யார், ஹைகோர்டு வக்கீல், மைலாப்பூர் ... ... ... | 25 |
| ,, | ராய்ஸாஹெப் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், யுனிவர்ஸிடி புரொபெஸர், மைலாப்பூர் ... | 25 |
| ,, | கே. ஸ்ரீநிவாஸய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மைலாப்பூர் ... ... ... | 50 |
| ,, | டி. வி. நீலமேகாசார்யார், ஹைகோர்டு வக்கீல், கீள்பாக்கம் ... ... ... | 15 |
| ,, | ஹானரபில் எஸ். ஸ்ரீநிவாஸய்யங்கார், அட்வொகேட் ஜெனரல், மைலாப்பூர் ... ... | 200 |
| ,, | பூண்டி துரைஸாமி அய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மதராஸ் ... ... ... | 10 |
| ,, | காயார் வி. தேசிகாசார்யார், ஹைகோர்டு வக்கீல், மதராஸ் ... .. ... | 10 |
| ,, | வி. எஸ். வெங்கடாசார்யார், ஹைகோர்டு வக்கீல், எழும்பூர் .. ... ... | 25 |
| ,, | ஸ்ரீ வேங்கடாசார்யார், தேனார்விளாகம் ... | 25 |
| ,, | என். எஸ். நரஸிம்மாசார்யார், டிஸ்டிரிக்டு முன்ஸிப், புரொதத்தூர் ... ... | 25 |
| ,, | ராவ் பஹதூர் டி. விஜயராகவாசார்யார், திவான், கொச்சி ... ... ... | 50 |
| ,, | ரங்கநாத தாதாசார்யார், லக்ஷ்மிநாயக்கன்பாளையம் | 250 |
| ,, | ஆராவமுத அய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், பெங்களூர் ... ... ... | 25 |
| ,, | கே. பாஷ்யம் அய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மைலாப்பூர் ... ... ... | 20 |
| ,, | எஸ். ராகவய்யங்கார், ஸப் ஜட்ஜ், திருச்சிராப்பள்ளி | 10 |
| ,, | என். எஸ். ராமஸ்வாமி அய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், கோயம்பத்தூர் ... ... | 25 |
| ,, | எஸ். ஆர். ரங்கஸாமி அய்யங்கார், வக்கீல், ஈரோடு. | 20 |
| ,, | கே. ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார், ரெவின்யூ கமிஷனர், பெங்களூர் ... ... ... | 15 |

| | | |
|---|---|---|
| ஸ்ரீ. உப. | வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மதராஸ் ... ... ... | 50 |
| ,, | வ. வி. கோபாலாசார்யார், ஹைகோர்டு வக்கீல், திருச்சிறுப்பள்ளி ... ... ... | 20 |
| ,, | என். கோபாலஸ்வாமி அய்யங்கார், ஸ்பெஷல் டிப்டி கலெக்டர், மைலாப்பூர் ... ... | 25 |
| ,, | ராவ் பஹதூர் வி. ஆர். திருவேங்கடாசார்யார், ஜட்ஜ், மைலாப்பூர் ... ... | 25 |
| ,, | ராமஸ்வாமி அய்யங்கார், மேலப்பாளையம் ... | 10 |
| ,, | ஸ்ரீநிவாஸாசார்யார், மேலப்பாளையம் ... | 10 |
| ,, | கே. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், திருவல்லிக்கேணி ... ... | 10 |
| ,, | டி. ஸி. ஸ்ரீநிவாஸய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மதுரை ... ... ... | 25 |
| ,, | டி. டீ. ஸ்ரீநிவாஸமூர்த்தி அய்யங்கார், நியோபதி டாக்டர், திருவஹீந்திரபுரம் ... ... | 10 |
| ,, | வி. பத்மநாபய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மைலாப்பூர் ... ... ... | 10 |
| ,, | நடாதூர் ஸ்ரீநிவாஸாசார்யார், ஹைகோர்டு வக்கீல், புரசைபாக்கம் ... ... ... | 25 |
| ,, | வன்பாக்கம் வெ. தேசிகாசார்யார், ரங்கபவனம், எழும்பூர் ... ... ... | 25 |
| ,, | எஸ். டீ. கிருஷ்ணய்யங்கார், ஹைகோர்டு வக்கீல், மதுரை ... ... ... | 25 |
| ,, | ஐயா யாமுந தாதாசார்யார், ஸ்ரீரங்கம் ... | 40 |

ஸர்வ வேதாந்தஸாரமான இந்த க்ரந்தம் 'திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோக ஹிதைஷிணீ' என்று நாடெங்கும் பரவிச் செழித்தோங்கும் வண்ணம் ச்ரிய:பதியான புருஷோத்தமனை அநவரதம் ப்ரார்த்திக்கின்றோம்.

நடாதூர் ஸ்ரீநிவாஸாசார்யர்,
வன்பாக்கம் வெ. தேசிகாசார்யர்,
ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார ப்ரசாரண ஸபையின்
கார்யதரிசிகள்.

மதராஸ்,
10—2—20.

# உபோத்காதம்.

|| श्रीः ||

|| श्रीमते निगमान्त महादेशिकाय नमः ||

|| श्रीमते श्रीनिवासरामानुजमहादेशिकाय नमः ||

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரமென்னும் இந்த க்ரந்தத்தை அருளிச்செய்த ஸ்ரீமந் நிகமாந்தமஹாதேசிகன் கலி 4370-வது

திருவவதாரம்.

விபவ (இங்கிலீஷ் 1268) வருஷத்தில் புரட்டாசிமீ சிரவண நக்ஷத்திரத்தில் காஞ்சீபுரத்தில் ஹிமவனம் என்றும், திருத்தண்கா என்றும், சொல்லப்படுகிற விளக்கொளி (தீபப்ரகாசர்) எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் நியமித்த எழுபத்து நாலு ஸிம்ஹாஸனதிபதிகளில் ஒருவராய் விச்வாமித்திர குலதிலகரான அநந்த ஸோமயாஜியாருடைய திருப்பௌத்திரரான அநந்தஸூரியாருக்கும் தோதாத்ரி யம்மைக்கும் திருக்குமாரராக அவதரித்தருளினார். இவருடைய அவதார வைபவத்தையும் ப்ரபாவத்தையும் கணிசித்து இவர் குமாரரான நாப்புல் நயினார் 'वेंकटेशावतारोयं तत्घण्टांशोथवाभवेत्। यतींद्रांशोथवेत्येवं वितर्क्यायास्तु मंगळं ||' என்றும், 'அன்றிவ்வுலகினையாக்கி அரும்பொருள் நூல் விரித்து ** பின்னும் வென்றிபுகழ் திருவேங்கடநாதனென்னும் குருவாய்நின்று நிகழ்ந்து' என்றும் அருளிச்செய்தார். இவர் திருவேங்கடமுடையானுடைய அவதார விசேஷம் என்பது ஸம்ப்ரதாய நிஷ்டர்கள் அறிந்த விஷயம். இத்தைக் கணிசித்திறே 'श्रीमद्वेंकटनाथार्य' என்றனுஸந்தித்தார்கள். திருவேங்கடமுடையானே தமது ஸ்வர்ண கண்டையை இவர் தாய் தந்தையர்க்குக் கொடுத்ததாக அவர்கள் கனவுகண்டு அந்தவ்யாஜமடி

யாக இவர் அவதரித்தார் என்பதைக் கணிசித்து 'तत्त्वण्टांश:' என்றருளிச்செய்தது. ஸ்ரீபாஷ்யகாரர் அவதார ஸமாபன தசையில் கலங்கியிருந்தசிஷ்யர்களைப்பார்த்து கொங்குப் பிராட்டியைக்கேட்டு ஸம்சய நிவ்ருத்திசெய்து கொள்ளும்படி அவர்களை நியமித்தார். அவர்கள் அப்படியே அப்பிராட்டியிடம் செல்ல அவளும் ஸ்ரீபாஷ்யகாரர் திருவடி ஸம்பந்திகளான அம்மஹாத்மாக்களை ஸேவித்து அவர்கள் நடுவில் உட்கார்ந்து, அலேந்திருந்த தன் கூந்தல்களை எண்ணெ தடவி வாரி முடித்து, சிவந்த நிறமுள்ள பட்டுக் கயிற்றினுல் ஒரு கட்டுக்கட்டி, அதன்மேல் வெண்மையான பட்டுக் கயிற்றினுல் பின்னும் அழுத்தமாய்க் கட்டிவிட்டு, அவர்களை மறுபடியும் ஸேவித்து, 'தேவரீர்கள் என்னைத் தேடிவந்த கார்யம் இதுதான், இனித் தேவரீர்கள் எழுந்தருளலாம்' என்று விண்ணப்பம் செய்தாள். இதனபிப்ராயத்தை யறியாமல் அவர்கள் திரும்பவும் ஸ்ரீபாஷ்ய காரரிடம் விஜ்ஞாபிக்க, அவர், அவள் வேதங்களின் அவதாரமென்றும், அவளுடைய அலேந்த கூந்தல்கள் துர்வாதிகளின் அபார்த்தங்களினுல் கலேக்கப்பட்ட வேத வாக்யங்கள் என்றும், சிவந்த கயிற்றினுல் கட்டியது 'நாம் ஸந்யாஸி ரூபமாய் அவதரித்து வேதார்த்தங்களை ஒன்று சேர்த்து பரிஷ்கரித்தது' என்றும், பிறகு வெண்கயிற்றினுல் அழுந்தக்கட்டியது 'நாமே இன்னெரு அவதாரம்செய்து க்ரஹஸ்தாச்ரமத்திலிருந்து அவைகளை ப்ரதிவாதிகள் அசைக்கவொண்ணுதபடி உறுதிப்படுத்தப்போகிறேம்' என்றும் அபிப்ராயங்களைத் தெரிவிக்கின்றனவாகையால் சோகிக்க வேண்டாம் என்று தேற்றினர். ஸ்ரீயதிராஜஸப்ததியில் 'चिरन्तनसरस्वती चिकुरबन्धसैरन्ध्रिका:' என்னும் ச்லோகத்தில் அபிப்ரேதமென்று பெரியோர்கள் சொல்லும் இந்தச் சரித்திரம் இங்கு 'यतींद्रांशोथवा' என்று அருளிச்செய்யப்பட்டது.

அவதார வைபவம்.

'आप्रादुर्भावं प्रकटितपरब्रह्म भाव:' என்கிற ஸ்ரீ க்ருஷ்ணவதாரத்தைப் போலவே ஸ்ரீ தேசிகனும் தம்முடைய அதிமாநுஷ சக்தியை வெளியிட்டருளினர் என்பது இவர் சரித்திரத்தில் பல வ்ருத்தாந்தங்களாலும் தெரியவரும். உதாஹரணமாய் இவர் ஐந்து வயதிலேயே ஸ்ரீ அம்மாள் காலக்ஷேப கோஷ்டிக்குத் தம்முடைய மாதுலரான அப்புள்ளாருடன் சென்று அவரை தண்டன் ஸமர்ப்பித்து நிற்கும்

கால் இவருடைய திவ்ய தேஜஸ்ஸைப் பார்த்து மோஹித்து அதிலீடு பட்டு காலக்ஷபத்தில் விட்ட இடம் தெரியாமல் சிஷ்யர்கள் திகைத்து நிற்கும்பொழுது இவர் அந்த இடத்தை எடுத்துச்சொல்லி அர்த்த விசேஷங்களை நிரூபிக்க, ஸ்ரீஅம்மாளும் 'प्रतिष्ठापित वेदान्तः प्रतिक्षिप्त बहिर्मतः। भूयास्त्रैविद्यमान्यस्त्वं भूरिकल्याण भाजनं॥ (வேதாந்தங்களை ஸ்தாபித்து புறச் சமயங்களை தோற்பித்து வேதங்களும் வைதிகர்களும் கொண்டாடும்படி அநந்த கல்யாண குணங்களுக் கிருப்பிடமாவாய்)' என்று ஆதரவுடன் அனுக்ரஹித்ததை இவர் தாமே தம் க்ரந்தங்களில் பல இடங்களில் அருளிச்செய்திருக்கிறார். ஒரு ராத்திரியில் ஒரு யாமத்தின் பாதியில் ஸ்ரீபாதுகாஸஹஸ்ரத்தையருளிச் செய்ததும், ப்ரபோதசந்திரோதயத்தைப் பாரீர் என்று ப்ரதிவாதி கொடுக்க அதே க்ஷணத்தில் ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயத்தை அருளிச் செய்ததும் லோகப்ரஸித்தமிறே.

**வித்யாப்யாஸம்.** இவர் வேதாந்தோதயனர் என்று விளங்கும் மடப்பள்ளியாச்சானுடைய கொள்பேரனும் தமது மாதுலருமான வாதிஹம்ஸாம்புதாசார்யர் என்று பெயர் பெற்ற ஆத்ரேயராமானுஜர் (அப்புள்ளார்) ஸ்ரீபாதத்திலே, ஸ்ரீக்ருஷ்ணன் ஸாந்தீபினியினிடத்தில் அறுபத்துநாலு கலைகளையும் அறுபத்துநாலு நாள்களில் அப்யஸித்தாப்போலே இருபது வயதிற்குள்ளே ஸகல சாஸ்திரங்களையும் சிக்ஷித்தார் என்பதைப் 'विंशत्यब्दे विश्रुत नानाविध विद्यः' என்றிவர் தாமும், 'रामानुजार्यादात्रेयान्मातुलात्सकलाः कलाः। अवाप विंशत्यब्दे' என்று தூப்புல் நயினாரும் அருளிச்செய்தார்கள்.

**துணிசயம்.** இதற்குப்பிறகு தம்மாசார்யனால் உபதேசிக்கப்பட்ட கருடமந்திரத்தை ஆவ்ருத்திசெய்வதற்காக மஹாநதி, திவ்ய க்ஷேத்திரம், பர்வதம் இம்மூன்றும் ஓரிடத்தில் சேர்ந்த மஹாஸித்திக்ஷேத்திரமாகிய திருவஹீந்திரபுரத்தை நாடி ஸித்திபெற்று, ஸ்ரீகருடன் உபதேசித்த ஸ்ரீலக்ஷ்மீஹயக்ரீவ மந்திரத்தை ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்மன் ஸந்நிதியில் ஓர் அச்வத்த வ்ருக்ஷத்தின் அடியில் ஆவ்ருத்திசெய்து ஸ்ரீஹயக்ரீவ ப்ரஸாதத்தாலே 'அருள்தருமடியவர்பால் மெய்யைவைத்துத் தெருள்தாநின்ற தெய்வநாயகா' என்றிவர் தாமும், 'तुरगवदनतेजो बृंहिताश्चर्यशक्तिः' என்று பின்

புள்ளாரும் அனுஸந்தித்தபடியே அபரிமித ஜ்ஞாநசக்தியுக்தராய், விசுவாமித்திரருபதேசத்துக்குப் பிறகு ஸ்ரீசக்ரவர்த்தித்திருமகனுக்கு அஸ்திரதேவதைகள் நேரில் நின்று 'इमेस्म परमोदार किंकरास्समुपस्थिताः' என்று விண்ணப்பம் செய்ததுபோல வித்யாபிமானி தேவதைகளெல்லாம் தாங்களேவந்து வரிக்கும்படியான விசேஷ கடாக்ஷத்தைப் பெற்றார். இதை ஸ்ரீஹயக்ரீவஸ்தோத்திரத்தில் 'मनोगतं पश्यति यस्सदात्वां मनीषिणां मानसराजहंसं। स्वयं पुरो भावविवाद भाजः किं कुर्वते तस्य गिरो यथार्हं ॥' என்றருளிச் செய்தார். இதைத் திருவுள்ளம்பற்றியே ஸ்ரீரங்கநாயகியும் பின்பு 'ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர:' என்றிவருக்குத் திருநாம மனுக்ரஹித்தாள். இப்படி இவருக்கு அஸாதாரணமான ஜ்ஞான வைபவத்தை 'दूषण्यादौ तार्किकाग्रेसरत्वं दृश्यं श्रीमद्वेंकटेशस्य सूरेः। अन्या लभ्या चातुरी पद्यगुंभे सर्वज्ञत्वं तत्वमुक्ताकलापे ॥ (இவர் தார்க்கிகர்களுக்குள் ச்ரேஷ்டர் என்பதைச் சததூஷணீ முதலிய க்ரந்தங்களிலும், ஸர்வஜ்ஞரென்பதையும், கவிதையில் பிறர்க்கு நிலமல்லாத சாதுர்யத்தையுடையவரென்பதையும் ஸ்ரீதத்வமுக்தாகலாபத்திலும் அறியலாம்)' என்று ஸ்ரீதொட்டயாசார்யர் அருளிச்செய்தார் இப்படிப்பட்ட ஜ்ஞானத்துக்கனுகுணமான இவருடைய வைராக்யம் விஜயநகரம் மஹாராஜாஸபையில் வித்யாரண்யருக்கும் அக்ஷோப்யமுனிவருக்கும் நடந்த விவாதத்தில் மத்யஸ்தராயிருக்கும்படிக்கும் அதற்காக விசேஷ தனத்தை ஸமர்ப்பிப்பதாகவும் ப்ரார்த்தித்தகாலத்தில் அதற்குப் பதிலாக எழுதியனுப்பிய வைராக்யபஞ்சகத்தின் அர்த்தானுஸந்தானத்தாலும், ஸ்ரீதொட்டையாசார்யர் அருளிச்செய்த 'धनानि * * समलोष्टरुक्मं ॥' என்கிற வைபவப்ரகாசிகா ச்லோகத்தினாலும், மற்றும் இவர் சரித்திரத்தினாலும் ஸுவ்யக்தம். இப்படிப்பட்ட அஸாதாரணமான வைபவத்தைத் திருவுள்ளம்பற்றி 'ज्ञानवैराग्य भूषणं' என்றனுஸந்தித்தார்கள்.

**திவ்யதேச ப்ரதிஷ்டாதிகள்.**

இவர் இந்த லோகோபகாரமாகச் செய்த திவ்யதேச ஸ்தாபநம் முதலியவைகளும் ஸ்ரீவிசிஷ்டாத்வைத மதாபிவ்ருத்திக்கும், ஜ்ஞான ப்ரவர்த்தனத்துக்கும் செய்திருக்கும் விசேஷ உபகாரங்களும் எண்ணிறந்தவை. அவைகளில் ப்ரதானமானவை—ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் துலுக்க கலாபத்தில் வெளியில் எழுந்தருளப்பண்ணப்பட்டிருந்த ஸ்ரீரங்கநாதனை செஞ்சி ராஜாவாகிய கோபணார்யனைக்-

கொண்டு மறுபடியும் திருப்ரதிஷ்டாதிகள் செய்வித்தருளினதும், தில்லைத் திருச்சித்திரகூடத்திலிருந்து கீழ்த்திருப்பதியில் எழுந்தருளப்பண்ணப்பட்டிருந்த ஸ்ரீகோவிந்தராஜனை மறுபடியும் அவ்விடத்தில் திருப்ரதிஷ்டை செய்வித்தருளினதும், ஸ்ரீரங்கத்தில் ஒரு திருவத்யயன உத்ஸவத்தில் ஆழ்வாராதிகளுக்கு ப்ரதிஷ்டையும் ஆராதனாதிகளும் அவர்களுடைய ப்ரபந்த படநாதிகளும் கூடாதென்று ஆக்ஷேபித்தவர்களை நிராகரித்து அவைகளை ஸ்தாபித்தருளினதும், பெருமாள் கோயிலில் ஸ்ரீதேவப் பெருமாளுக்கு ப்ரும்மோத்ஸவம் நடக்கும்பொழுது சைவர்கள் நடத்தக்கூடாது என்றாக்ஷேபிக்க ச்ரிய:பதியின் பரத்வத்தை ஸ்தாபித்து வாதிகளை நிரஸித்து உத்ஸவாதிகளை யதாக்ரமம் நடத்திவைத்தருளினதும். இச்சமயத்தில் ஸ்ரீவரதராஜன் தம்முடைய திருச்சின்னங்களில் ஒன்றை இவருக்கு பிருதாக அனுக்கிரகித்தது இப்போதும் அந்த ஸந்நிதியில் ஒற்றைத்திருச்சின்னம் ஊதிவருவதினாலும், வைசாக கருடோத்ஸவத்தில் ஸ்ரீதேசிகனுக்கு நடக்கும் விசேஷமர்யாதைகளினாலும் பிரஸித்தம்.

க்ரந்தங்கள். இவர் ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின்படி தத்வஹித புருஷார்த்தங்களை நிரூபித்திருக்கும் ப்ரகாரம்—பரதத்வமான எம்பெருமான் எல்லா அவஸ்தைகளிலும் லக்ஷ்மியுடன் பிரிவில்லாத சேர்த்தியையுடையவன் என்பதையும், லக்ஷ்மீதத்வத்தைப்பற்றி உண்டாகும் சங்கைகளுக்கெல்லாம் ஸமாதான மருளிச்செய்து அத்தத்வத்தையும் பரக்க நிரூபித்து, தத்வஸ்திதியை ஒருவராலும் கலக்கமுடியாதபடி பூர்ணமாக ஸ்தாபித்தருளினார். இவ்விஷயமான க்ரந்தங்கள் :— ஸ்ரீமந் ந்யாயபரிசுத்தி, ஸ்ரீமந் ந்யாயஸித்தாஞ்ஜனம், ஸ்ரீசதுச்லோகீ பாஷ்யம் முதலியவை. நாராயணனே பரதேவதை என்னுமர்த்தத்தை ஸ்ரீஸ்தோத்ரரத்னபாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் ஸ்தாபித்தருளினார். மற்ற அவரதத்வங்களைப்பற்றி ஸ்ரீமந்ந்யாய ஸித்தாஞ்ஜனம், ஸ்ரீமந் ந்யாயபரிசுத்தி, ஸ்ரீதத்வமுக்தாகலாபம், ஸ்ரீஸர்வார்த்தஸித்தி முதலிய க்ரந்தங்களில் நிரூபித்தருளினார். ஸர்வாதிகாரமாய் ஸர்வஸுலபமாயிருக்கும் ப்ரபத்தியே பரமஹிதமென்னுமர்த்தத்தை ஸ்ரீநிக்ஷேபரக்ஷை, ஸ்ரீமத்கீதாபாஷ்ய தாத்பர்யசந்திரிகை, ஸ்ரீமந்ந்யாய ஸித்தாஞ்ஜனம், ஸ்ரீகத்யத்ரய பாஷ்யம் முதலிய க்ரந்தங்களில் அருளிச்செய்தார். பரி

பூர்ண ப்ருஹ்மானுபவமும் அதின் பரிவாஹமான கைங்கர்யமும் பரம புருஷார்த்தமென்னு மர்த்தத்தை ஸ்ரீமந்ந்யாயஸித்தாஞ்ஜனம், ஸ்ரீகத்ய பாஷ்யம், ஸ்ரீதத்வமுக்தாகலாபம், ஸ்ரீஸர்வார்த்தஸித்தி முதலிய க்ரந்தங்களில் வெளியிட்டருளினர். ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்துக்கு விரோதமாக வேதங்களுக்கு அபார்த்தங்களைச் சொல்லுமவர்களை ஸ்ரீசததூஷணி, ஸ்ரீதத்வமுக்தாகலாபம், ஸ்ரீஸர்வார்த்தஸித்தி, ஸ்ரீந்யாயஸித்தாஞ்ஜனம், ஸ்ரீந்யாயபரிசுத்தி, ஸ்ரீபரமதபங்கம் முதலிய க்ரந்தங்களில் நிராகரித்து இந்த ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தியருளினர். ஸ்ரீமத் அதிகரணஸாராவளீ, ஸ்ரீமத் தத்வடீகை, ஸ்ரீமத் தாத்பர்யசந்திரிகை, ஸ்ரீமத் கத்யத்ரய பாஷ்யம், இந்த க்ரந்தங்களில் ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு அவருடைய திருவுள்ளத்துக்கு அனுகுணமாக வ்யாக்யானம் அருளிச்செய்தார். ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை ஸ்ரீ சதுச்லோகீ ஸ்தோத்ர ரத்ன பாஷ்யங்கள், இவைகளில் ஸ்ரீஆளவந்தார் ஸ்ரீஸூக்திகளுக்கு ப்ரமாணுனுகுணமான வ்யாக்யானம் அருளிச்செய்தார். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அஸாதாரணமான சங்கசக்ராங்கனம், திருமண்காப்பு, பகவதாராதனம், பகவத் ப்ரஸாதத்தின் மஹிமை முதலியவைகளை ஸ்ரீஸச்சரித்ரரக்ஷை ஸ்ரீபாஞ்சராத்திர ரக்ஷை முதலியவைகளில் ஸம்சய விபர்யயங்களற நிரூபித்தருளினர். பரமஹிதமாகிய ப்ரபத்தியின் உபாயத்வத்தைபற்றிச் சொல்லப்படும் ஆக்ஷேபங்களை யெல்லாம் அனுவதித்து அவைகளை ஸ்ரீநிக்ஷேபரக்ஷையில் நிராகரித்தருளி, ந்யாஸவித்யையின் அங்காங்கி விபாகாதிகளை ஸ்ரீமந்ந்யாஸவிம்சதி, ஸ்ரீமந்ந்யாஸதிலகம், ஸ்ரீமந்ந்யாஸதசகம் இவைகளில் நிரூபித்தருளினர். இவ்வர்த்தங்களை யெல்லாம் சாஸ்திர பரிசய மில்லாதவர்களும் ஸுலபமாய் அறியும்பொருட்டு எளிதான மணிப்ரவாள நடையில் அவரவர்கள் புத்திக்கும், சக்திக்கும் தக்கபடி ஸங்க்ரஹங்களாயும், விஸ்தாரங்களாயும் முப்பத்தொரு ரஹஸ்யங்களில் அருளிச்செய்தார். இவ்வர்த்தங்களையெல்லாம்தழுவி ஸ்ரீஸங்கல்பஸூர்யோதயமென்கிற நாடகத்தையும் அருளிச்செய்தார். அனேகம் திவ்யதேசத்து எம்பெருமான்கள் விஷயமாக ஸ்தோத்திரரூபமாக த்வாத்ரிம்சத் ஸ்தோத்திரங்களையருளிச்செய்தார். ரஹஸ்யத்ரயார்த்தங்களை ஸுலபமா யறியும்பொருட்டு திருமந்திரச்சுருக்கு முதலிய தமிழ் ப்ரபந்தங்களை யருளிச்செய்தார். ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தைப்பற்றி விஸ்தாரமாய் ஸ்ரீயாதவாப்

யுதயம் என்னும் காவ்யமருளிச்செய்தார். இப்படியே மற்றும் ஸ்ரீஹம்ஸ ஸந்தேசம், ஸ்ரீஸுபாஷிதநீவி முதலிய அனேகம் க்ரந்தங்களை அருளிச் செய்தார். திருவாய்மொழியின் அர்த்தங்களை ஸங்க்ரஹித்து அவைகளின் ஸங்கதி முதலியவைகளை ஸ்ரீமத்த்ரமிடோபநிஷத்ஸாரம் என்னும் க்ரந்தத்திலும். திருவாய்மொழியின் ஒவ்வொரு பாட்டின் அர்த்தத்தையும் ஸங்க்ரஹித்து ஸ்ரீமத் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ என்னும் க்ரந்தத்திலும் அருளிச்செய்தார். இப்படிக் கீழ்க் கூறிய க்ரந்தங்களில் அங்கங்கு நிரூபிக்கப்பட்ட அர்த்தவிசேஷங்களையெல்லாம் ஸ்வல்பகாலத்தில் அறியமுடியாதாகையினால் அவைகள் எல்லாவற்றின் ஸாராம்சத்தை ஒருங்கத்திரட்டி இந்த ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரமென்னும் க்ரந்தத்தை ஸங்க்ரஹருசிகளுக்கு இனியொரு க்ரந்தத்திலு மலையவேண்டாதபடி பரிபூர்ணமாக நிரூபித்தருளினார். இதன் பெருமையை ‘ अविज्ञातं विजानतां विज्ञात मविजानतां । रहस्यत्रयसाराख्यं परं ब्रह्मास्तु मे हृदि ॥ (இதன்பெருமை இவ்வளவென்று அளவிட்டறிந்தவர்களுக்கு இதின் பெருமை அறியப்படாதது, அப்படி அளவிட்டறியாதவர்களுக்கு இது உண்மையாயறியப்பட்டது, ஆகையால் இது பரப்ரும்மத்தைப்போன்ற பெருமையையுடையது, இது எக்காலும் என் மனதை விட்டகலாமலிருக்கவேண்டும்)’ என்று பின்புள்ளார்கள் பல படிகளாலும். அனுஸந்தித்தார்கள். இப்படி ஸ்ரீபாஷ்யகாரர் முதலிய பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு க்ரந்த முகேன தாத்பர்யார்த்தங்களைப் பரக்க நிரூபித்த உபகாரத்தைத் திருவுள்ளம்பற்றி ‘ रामानुजदयापात्रं ’ என்றனுஸந்தித்தார்கள்.

ஸித்தாந்தத்தின் ப்ரதான கொள்கைகள்.

இப்படிப் பஹுமுகமாக க்ரந்தத்தினாலும், அனுஷ்டானத்தினாலும், வேதாந்தஸித்தாந்தத்தை நிலைநிறுத்தின இவருடைய ப்ரதானக்கொள்கை யென்னவென்றால்:—எல்லாஜ் ஜாதியரும் அவரவர்கள் ஜாதிக்குரியதாய் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட தர்மங்களைப் பகவானுடைய கட்டளைகளிவை யென்றெண்ணி அவைகளை யனுஷ்டிக்கவேண்டுமென்பதும், அப்படி அனுஷ்டிக்கும்போது பகவத்ப்ரீதியொன்றையே பலமாக உத்தேசித்துத் தன் சக்திக்கனுகுணமாகச் செய்யவேண்டும், ஒரு காலத்திலும் அவைகளை விடக்கூடாது என்பதும், இப்படித் தங்கள் தங்கள்

ஜாதிக்கனுகுணமான கார்யங்களைச் செய்து வரும் எல்லா ஜாதியரும் சரணாகதியென்றும், ப்ரபத்தியென்றும் சொல்லப் படுகிற உபாயத்தை அனுஷ்டித்து மறு ஜன்மமில்லாமல் பரம புருஷார்த்தமாகிற மோக்ஷமென்னும் மீட்சியில்லா வாழ்ச்சியைப்பெற லாமென்பதும், ப்ரபத்திக்குப் பிறகு சாஸ்திரத்துக்கு வசப்பட்டவ னாய் நடக்கவேண்டும், அப்படி நடக்கத்தவறினால் பகவந் நிக்ரஹ முண்டாகும் என்பதும், ப்ராயச்சித்தாதி முகேன அவைகள் நிவ்ருத் தித்துவிடுமாகையினால் பரமபுருஷார்த்த லாபத்திற்குத் தடையாகாது என்பதும், பகவானிடத்தில் பக்தியுடையவர்கள் எந்த ஜாதியராயி னும் அவர்கள் விஷயத்தில் சாஸ்திர ஸம்மதமான கௌரவாதிகளில் குறைவுசெய்யக்கூடாதென்பதும், அப்படிச் செய்தால் பகவானு டைய நிக்ரஹம்வரும் என்பதும், ஸர்வ ப்ராணிகளுக்கும் ஹிதமாக நடந்துகொள்ளவேண்டுமென்பதும், அப்படி ஹிம்ஸாதிகளைச் செய் தால் பகவதப்ரீதிக்குப் பாத்திரனாவான் என்பதும். இப்படி வேதாந் தார்த்தங்களைப் பரக்க நிரூபித்த உபகாராதிசயத்தைத் திருவுள்ளம் பற்றி 'वन्दे वेदान्तदेशिकं' என்றனுஸந்தித்தார்கள்.

இவர் விஷயமான சில அபிப்ராயங்கள்.

ஸ்ரீபாஷ்யகாரர் தாராளமான மனதையுடையவரென்றும், அதை இவர் குறுக்கிவிட்டனர் என்றும், மதத்தில் இவர் ஆக்ரஹமுள்ளவர் என்றும், மற்றும் இப்புடை களில் இவரைப்பற்றிச் சிலர் சொல்வது இவ ருடைய க்ரந்தங்களில் பரிசயமில்லாதவர்கள் பிதற்றும்வார்த்தை. ஸ்ரீபாஷ்யகாருடைய அனுஷ்டானத்துக்கும், க்ரந்தங்களுக்கும் முற்றிலும் விருத்தமான கதைகளை கல்பித்து மூடர் கள் சொல்லும் ஐதிஹ்யங்களைப் புத்திமான்கள் அங்கீகரியார்கள். இவ்விஷயங்கள் இந்த ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தை ஒருதரம் ஸேவித்தவர்களுக்கு நன்கு புலப்படும். இவரைப்போலத் தாராள மான மனதுடையவர்கள் ஒரு மதத்திலும் இல்லையென்று திண்ண மாய்ச் சொல்லலாம். க்ரந்தமுகமாக அந்தணர்முதல் சண்டாளர் வரையிலான ஜாதியர்களில் ஒவ்வொருவரும் அவரவர்களுக்குரிய கர்மானுஷ்டானத்தினாலும், உபாயானுஷ்டானத்தினாலும் பரமபுரு ஷார்த்தத்தையடையலாம் என்று நிரூபித்தவர் இந்த மஹான் ஒரு வரே. மற்றும் ஆபாதப்ரதீதியாய் சாஸ்திரவிருத்தம்போல் தோன்

றும் வாக்யங்களைக்கண்டு நம் போலியர்கள் ப்ரமிக்காமலிருக்கும்படி அவைகளையெல்லாம் எடுத்து அவைகளுக்குத் தாத்பர்யார்த்தங்களை நிரூபித்திருக்கிறார்.

இந்த க்ரந்தத்தில் ச்ருதிகள், பாஞ்சராத்திரம், இதிஹாஸம், புராணங்கள், ஸ்ரீபாஷ்யகாரர் வரையிலான பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகள், இவைகள் ப்ரமாணமாகக் காட்டப்பட்டிருக்கின்றன. ஸ்ரீமத்ஸம்ப்ரதாய பரிசுத்தியில் இவர் தாமே 'ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்யப்ரசிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் அர்த்தவிரோதமில்லை, யோஜநா பேதமேயுள்ளது' என்றருளிச் செய்திருக்கிறபடியே பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளைலோகாசார்யர் முதலியவர்களுடைய வாக்யங்களில் சில மேல்பார்வையாய் ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளத்துக்கு விரோதம் போல் தோன்றினபோதிலும் அவ்வாக்யங்களுக்கு ப்ரமாணனுகுண மானவர்த்தங்களை இக்ரந்தத்தில் நிரூபித்திருக்கிறார். ஆகையினால் இக்ரந்தம் ஸர்வ சாஸ்திரங்களுக்கும் ஸாரமென்று பெரியோர்களினால் ஆதரிக்கப்பட்டது.

க்ரந்த ஸங்க்ரஹம்.

இதில் முதல் இருபத்திரண்டதிகாரங்கள் அடங்கிய அர்த்தானு சாஸந பாகத்தில் ஆஸ்திகர்கள் சாஸ்திரங்களில் அவச்யம் அறிந்துகொள்ளவேண்டிய தத்வஹித புருஷார்த்தங்களை நிரூபித்தருளினார். மேல் நாலு அதிகாரங்களடங்கிய ஸ்திரீகரணபாகத்தில் கீழ் நிரூபிக்கப்பட்ட அர்த்தங்களில் நேரிடுகிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் அருளிச்செய்தார். இதற்குமேல் மூன்றதிகாரங்கள் அடங்கிய பத வாக்ய யோஜனுபாகத்தில் இப்படி நிரூபித்த ஸகல சாஸ்திரார்த்தங்களும் ரஹஸ்யத்ரயங்களில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறபடியை நிரூபித்தருளினார். முடிவில் மூன்றதிகாரங்களடங்கிய ஸம்ப்ரதாய ப்ரக்ரியா பாகத்தில் இவ்வர்த்தங்களை உபதேசிக்கும் ஆசார்யனிருக்கும்படியும், உபதேசம் பெறும் சிஷ்யன் இருக்கும்படியும், க்ரந்த நிகமனமும் முறையே அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இவ்வதிகாரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஸங்கதி முதலியவைகளை வ்யாக்யானத்தில் அங்கங்கே கண்டு கொள்வது. ஆக 'பரமாத்மா ஒன்றை யறிந்தால் ஸர்வமும் அறியப்பட்டதாகும்' என்று ச்ருதியில் சொல்லியிருப்பதைப்போல

இக்ரந்தம் ஒன்றைப் பூர்த்தியாயறிந்தால் விசிஷ்டாத்வைத ஸம்ப்ர தாயார்த்தங்கள் எல்லாம் அறியப்பட்டதாகும்.

அவதார ஸமாபனம்.

இவர் விபவதசையில் நூற்றொருவருஷம் எழுந்தருளியிருந்து கலி 4471வதான ஸௌம்ய வருஷத்தில் கார்த்திகைமீ க்ருத்திகா நக்ஷத்திரத்தில் தம்முடைய அவதாரத்தை ஸமாபனம்செய்து தம்முடைய அவதாரத்துக்கு வ்யாஜமான கண்டாக்ருதியை அடைந்தார். இவ்வர்த்தம் ‘अब्दे सौम्ये च वारे गतवति तरणौ वृश्चिकं कृत्तिकर्क्षे राकायां वेंकटेशो यतिनृपतिमतं सर्वतः स्थापयित्वा । वेदान्ताचार्यवर्योविरचितविविधानेकदिव्यप्रबन्धः श्रीशैलाधीश घण्टाकृति वपुरभवद्देशिकेन्द्रो दयालुः ॥’என்று ஸ்ரீநைநாராசார்யரால் அனுஸந்திக்கப்பட்டது.

நிகமனம்.

இக்ரந்தத்துக்கு அனேக வ்யாக்யானங்கள் இருந்தாலும் அவைகள் எல்லாம் சாஸ்திரங்களில் விசேஷ பரிசயமுள்ளவர்களுக்கே அறியக்கூடியவைகளாயிருக்கிறபடியினால் அந்த வ்யாக்யானங்களையெல்லாம் தழுவி ஸத்ஸம்ப்ரதாயத்தை அனுஸரித்ததாய் எளிதான தமிழில் ஒரு வ்யாக்யானம் எழுதும்படி அனேகம் பெரியோர்கள் நியமித்ததை சிரஸாவஹித்து அடியேன் இந்த வ்யாக்யானத்தை எழுதத் துணிந்தேன். இந்த வ்யாக்யானத்தில் அச்சுப்பிழைகளும், அஜ்ஞானத்தினால் ஸஹஜமாய் உண்டாகக்கூடிய மற்றப் பிழைகளும் இருந்தபோதிலும், ‘तद्धरिणयेन ठविया (உம்முடைய ஸபையில் வேதங்களெல்லாம் உம்மை ஸ்தோத்திரம் செய்துநிற்க அவைகளின் நடுவில் மந்தபுத்தியையுடைய அடியேன் ஸ்தோத்திரம் சொல்லையில் மிறள் வைத்ததைப்போல திருஷ்டிதோஷ பரிஹாரத்துக்காவது உபயோகப்படட்டும்)’ என்று அருளிச்செய்திருக்கிறப்போலவும் ‘शुनालीडाकामं भवतु सुरसिन्धु र्भगवती तदेषाकिं भूता सैतु सपदि सन्तापरहितः’ என்று மருளிச்செய்திருக்கும் ந்யாயத்தினால் இந்த க்ரந்தத்துக்கு அவைகளினால் ஒருவிதந்யூநதையும் வாராதென்பதையும், அல்பஜ்ஞனை அடியேனுடைய புத்தியும் வாக்கும் பரிசுத்தமானபடியையும் நினைத்து இதை க்ருபையுடன் பெரியோர்கள் அங்கீகரிக்கவேணுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

இதில் குறிக்கப்பட்டிருக்கும் ப்ரமாணங்களின் ஆகாரங்கள் ஸ்ரீ உப. வே. திருக்கோட்டியூர் ஸௌம்யநாராயணாசார்யர் ஸ்வாமிகளினுடைய ப்ரமாணத்திரட்டுடன் ஒத்துப்பார்க்கப்பட்டு எழுதப்பட்டிருக்கிறது. இப்படி இந்த ப்ரமாணத்திரட்டைக்கொடுத்து உதவி புரிந்த அந்த ஸ்வாமியினிடத்தில் மிகவும் க்ருதஜ்ஞதை உடையவனாயிருக்கிறேன்.

இந்த க்ரந்தத்தை அச்சிட்டு வெளியிட முன்வந்த ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரப்ரசாரண ஸபை அத்யக்ஷர் ஸ்ரீஉப எஸ்.ராஜகோபாலாச்சார்யருக்கும், இக்ரந்தம் பூர்த்தியாவதற்கு பரிச்ரமப்பட்ட கார்யதர்சிகளான ஸ்ரீ. உப. நடாதூர் ஸ்ரீநிவாஸாசார்யருக்கும், வன்பாக்கம் வெ. தேசிகாசார்யருக்கும், இக்ரந்த ப்ரசாரணமாகிய இக்கைங்கர்யம் நிர்விக்னமாய் நிறைவேறும்படி இந்த ஸபையின் மற்ற எல்லாக் கார்யங்களையும் ச்ரத்தையுடனும், ஊக்கத்துடனும் செய்து வந்த உதவி கார்யதரிசி ஸ்ரீ. உப. கோமடம் ஸ்ரீநிவாஸய்யங்காருக்கும் நாமெல்லோரும் நம்முடைய நன்றியைச்செலுத்தக் கடமைப்பட்டவர்களாயிருக்கின்றோம்.

விக்தர்த்தி௵ தை௴ 28உ

தி. சே. நரஸிம்மன்.



# விஷயஸூசிகை

|| श्रीः ||

# ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத் தனியன்கள்.

[ஸ்வாசார்யன் முதலாகப் பகவான் வரையிலாக உள்ள ஆசார்ய பரம்பரையை அவரவர்கள் ஸம்ப்ரதாய க்ரமப்படி அநுஸந்தித்த பிறகு இந்த ச்லோகங்களை அநுஸந்திக்கவும்.]

विगाहे निगमान्तार्यं विष्णुपादसमुद्भवां ।
रहस्यत्रय साराख्यां त्रिस्रोतसमकल्मषां ॥

अविज्ञातं विजानतां विज्ञात मविजानतां ।
रहस्यत्रयसाराख्यं परं ब्रह्मास्तु मे हृदि ॥

சீரொன்று தூப்புற் றிருவேங்கட முடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

(pp 1118 to 1280 missing)



ப்ருதே தத்கைவல்யஸ்ய ஸாதகா:’ என்றுசொல்லு கிறபடியே தனக்கு ஸாத்யமாயிருப்பதொரு உபாய விஶேஷத்தாலே ஸித்த இவ்வனுபவத்தை ஐஶ்வர்யானுபவத்தோடும் பகவதனுபவத்தோடும் துவக்கில்லாத படியாலே கைவல்யமென்று பேரிட்டார்கள். பகவச்சாஸ்த்ரத்தில் கைவல்ய ஶப்தம் ஸர்வோபாதி நிவ்ருத்தியை நினைக்கிறது. ஆத்ம மாத்ராநுபவ விஷயமாக 1 ‘ஸ்வாத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா’ இத்யாதிகளிற் ப்ராப்யமான முக்தி ஶப்தமும் 2 ‘விகதேச்சா பய க்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ:’ இத்யாதிகளிற்போலே நிவர்த்யம். 3 ‘ஜராமரணமோக்ஷாய’ என்றதுவும் தேவர்களுடைய அமரத்வவ்யபதேஶம்போ

---

றும், தத்கைவல்யஸ்ய - அந்த ஆத்மாவின் கைவல்யத்துக்கு, ஸாதகா: - உபாயங்கள். உபாயவிஶேஷத்தாலே - கர்மயோகம் முதலியவைகளில் ஏதாவது ஒன்றினாலே. ‘இவ்வனுபவத்தை’ என்பது ‘பேரிட்டார்கள்’ என்பதோ டன்வயிக்கிறது. ‘ஐஶ்வர்ய’ என்றது ஐஸ்வர்யத்தை. கைவல்யம் - கேவலனாயிருக்கை. மோக்ஷத்தையும் சில இடங்களில் கைவல்யம் என்று சொல்லி யிருப்பதற்குக் காரணமருளிச் செய்கிறார்—‘பகவச்’ என்றாரம்பித்து. கைவல்யத்தைச் சொல்லுமிடத்தில் ‘முக்தி’ என்னும் பதம் ப்ரயோகித்திருப்பதற்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார்—‘ஆத்ம’ என்றாரம்பித்து. ஆத்மானுபூதி - ஆத்மாவை யனுபவிப்பதென்கிற, யா - எந்த, முக்தி:- மோக்ஷம், உக்தா - சொல்லப்பட்டதோ. ய:-எவன், ஸதா-எப்பொழுதும், விகத - போயிருக்கிற, இச்சா - ஆசை, பய-பயம், க்ரோத: - கோபம், இவைகளை யுடையவனோ, ஸ: - அவன், முக்த ஏவ - முக்தன்தான், இங்கு முக்த துல்யன் என்பதில் தாத்பர்யமாகிறாப்போலே என்றபடி. ஜராமரணமோக்ஷாய - கிழத்தனம், மரணம், இவைகளிலிருந்து விடுபடுவதற்காக. ஒரு நாளும் பிறப்பு மரணாதிகளில்லை என்றேற்படுகிறதே என்று ஶங்கையின் தாத்பர்யம். அமரத்வவ்யபதேஶம்போலே - தேவதைகளை அமரர்கள் என்று சொல்லி யிருக்கிறாப்போலே, அமரர் என்கிற பதத்துக்கு மரணமில்லாதவர்கள் என்றர்த்தம்,

1 வரத-ஸ்த-81. 2 கீதை-5-28. 3 கீதை-7-29.

லே ஆபேக்ஷிகம். ரூபேண முக்திவ்யபதேசமாம் விஷயத்தைப்பற்றச் சொல்லுகிறதாகவுமாம். இப்படி விபவ வ்ருத்தி ஸாலோக்யாதி ஸ்தாநத்தில் முக்திஶப்தமும் நிர்வாஹ்யம். 1 'லோகேஷு விஷ்ணோர் நிவஸந்தி கேசித் ஸமீபம் ருச்சந்தி ச கேசித் அந்யே | அந்யே து ரூபம் ஸத்ருசம் பஜந்தே ஸாயுஜ்யம் அந்யே ஸ து மோக்ஷ உக்த: ||' என்று நிஶ்சயிக்கப்பட்டதிறே. இதிற்சொன்ன ஸாயுஜ்யம் ஸாம்யத்திற்சென்றவனுடைய போகஸாம்யம். கேவலாத்மாநுபவம் நித்யமன்றென்னுமிடமும் ஸாக்ஷான்மோக்ஷமன்றென்னுமிடமும் 2 'யத்விஷ்யாச்ச ஜநா ஹத்யா ஏனவஹ்நி தே ஶ்ருதா: | தேஷாம் தனகாங்க்ஷிண: ஶ்ரேஷ்டா ஸ்தேஷ்வேவாநந்த்யதேவதா: || ஸஹஸ்ரேவ ஹதீஸ்தேஷாம் நிராஶீ: கர்மகாரிணாம் | யே

---

இதற்கு அக்னீந்திராதி தேவதைகளுக்கு ஸம்ஹாரம், ஸ்ருஷ்டி, முதலியவைகள் உண்டு என்கிற ஶ்ருதிக்கு விரோதமாகிறபடியினால் நம்மைப்போல அதிஶீக்கிரத்தில் மரண மடைகிறவர்களல்ல என்றர்த்தமாகிருப்போலே. **ஆபேக்ஷிகம்** - நம்மையபேக்ஷித்து மரணாதிகள், இல்லாதவர்கள் சீக்கிரத்தில் ஜராமரணங்களில்லாதவர்கள் என்றபடி. '**ரூபேண**' இத்யாதிக்கு பஞ்சாக்னி வித்யையில் மோக்ஷத்துக்குப் போகிறவனுக்கே நடுவில் கைவல்யம் உண்டாகிறது, அவன் கொஞ்சகாலம் கழித்து மோக்ஷத்துக்குப் போகிறவனாகையினால் அப்படிப்பட்டவர்களைக் குறிக்கிறது என்று தாத்பர்யம். ஔபசாரிகமாக முக்தி ஶப்தம் வேறு பலங்களிலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதென்று அருளிச் செய்கிறார்—'இப்படி' என்றாரம்பித்து. **நிர்வாஹ்யம்** - ப்ரமாணாந்தரங்களுக்கு விரோதம் வாராமைக்காக ஔபசாரிகமாக எப்படிநிர்ணயிக்கப்பட்டதோ அப்படியே இங்கும் என்று தாத்பர்யம். இதற்குக் காரணம் நிரூபித்தருளுகிறார்—'**லோகேஷு**' என்றாரம்பித்து. **நிஶ்சயிக்கப்பட்டது**-ஸாயுஜ்யத்தையே மோக்ஷமென்று சொல்லியிருக்கிறது. இந்த ஸாயுஜ்யமேமோக்ஷஶப்தத்திற்கு முக்யார்த்தம்என்றருளிச்செய்கிறார்—

---

1 690-ம் பக்கம் பார்க்க. 2 370-ம் பக்கம் பார்க்க.

தாமிஷ்டாஶ்ரயோ பக்தா: ஸர்வகாமாஹி தே மதா: ॥ ஸ
ஏவ ச்யவநதர்மாண: ப்ரதிபுத்தஸ்ய மோக்ஷபாக் ॥’ என்கிற வசநத்தாலே ஸித்தம். 1 ‘மோச்யதே தாதச்ச யாரோகாத்ஸ்ருத்வேமா மாதித: கதாம் । ஜிஜ்ஞாஸு: லபதே பக்திம் பக்தோ பக்தகதிம் வ்ரஜேத் ॥’ என்கையாலே ஸ்ரீகீதையில் ‘ஜிஜ்ஞாஸு:’ என்கிற வார்த்தநிஷ்டனும் க்ரமேண ஜ்ஞாநியாமென்றுக்தமாயிற்று. 2 ‘மன்னுறி’ லென்று ஸம்வாதநஸவத்தை நித்யமென்கையாலும் இதுக்கு வ்யவச்சேத்யமாகச்சொல்லு மாத்மாநுபாந

‘இதில்’ என்றாரம்பித்து. ‘ச்யவநதர்மாண:’ என்பதினாலே இது அநித்யம் என்பதும், ‘ப்ரதிபுத்தஸ்ய’ என்று ஜ்ஞானியினால் அடையப்படுகிறதே மோக்ஷமென்றும் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் என்றபடி. இந்தக் கேவலனும் ஜ்ஞானியாகியே மோக்ஷத்தை யடையவேணு மாகையினால் இவனுக்குண்டானது மோக்ஷமல்ல என்று நிரூபித்தருளுகிறார்—‘மோச்யத’ என்றாரம்பித்து. இமாம் - இந்த, கதாம் - கதையை, ஆதித: - ஆரம்பம் துடங்கி, ஸ்ருத்வா - கேட்டு, அதாவது கேட்டானேயானால், ஆர்த்த: - ரோகத்தால் பீடிக்கப்பட்டவன், ரோகாத் - ரோகத்தினால், மோச்யதே - விடப்படுவான், அன்றிக்கே ஐஸ்வர்யம் கிடையாமையினால் துக்கப்பட்டுக் கொண்டிருப்பவன் அந்தத் துக்கத்திலிருந்து விடுபடுகிறான் என்றர்த்தமாகவுமாம், ஜிஜ்ஞாஸு: - கைவல்யத்தை அனுபவிப்பவன், பக்திம் - பகவானிடத்தில் பக்தியை, லபதே – அடைகிறான், பக்த: - பக்தியோகநிஷ்டன், பக்தகதிம் - பக்தர்களினால் அடையவேண்டிய மோக்ஷத்தை, வ்ரஜேத் - அடைவான். உக்தமாயிற்று - ஜ்ஞானியாய் மோக்ஷத்தை யடைவானென்று சொல்லப்பட்டிருப்பதினால் இவன் அடையும் பலம் மோக்ஷமல்ல வென்றதாயிற்று. மன் - நித்யமான பலத்தை, உறில் - ஆசைப்பட்டாயேயாகில். இதுக்கு - இந்த நித்யமென்கிற பதத்துக்கு, வ்யவச்சேத்யமாக - தடுக்கப்பட வேண்டியதாக. இப்பாட்டில் கீழில் ‘உற்றது வீடுயிர்’ என்று கைவல்யத்தை அடையும் என்றருளிச்

1 பார-ஶா-348-81.　　2 திரு-1-2-5.

ஸவம் நித்யமன்றென்னுமிடம் வ்யஞ்ஜிதம். இதுக்கு 1 'இறுதிகூடா' இத்யாதிகளில் நாசமில்லையென்கிற பாசுரமும் வாதூலாதிஸ்தாதி க்ஷுத்ர விசேஷங்களில் அக்ஷய்யத்வோக்திபோலே 2 'எனையூழி' என்கிற வதிசிரகாலஸ்தாயித்வாபிப்ராயம். 3 'யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்' என்று இவ்வாத்மாநுபவஸ்தாநவிசேஷமுஞ்சொல்லப்பட்டது. இஸ்ஸ்தாநவிசேஷம் பரமபத மன்றென்னுமிடம் இப்ப்ரகரணந் தன்னிலே 4 'ஏகாந்திந ஸதா ப்ரஹ்மத்யாயினோ யோகினோ ஹி யே| தேஷாம் தத்பரமம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய:||' என்று ஸமவஸ்தாபிதாநன

---

செய்து, மேல் 'மன்னுறில்' என்றருளிச் செய்திருப்பதினால் அது நித்யமன்றென்று சொல்லப்பட்டதாகிறது. இதற்கு நாசமில்லை என்று ஸ்பஷ்டமா யருளிச் செய்திருப்பதற்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார்—'இதுக்கு' என்றாரம்பித்து. இறுதி - நாசம், கூடா - உண்டாகாத. அக்ஷய்யத்வோக்தி - நாசமில்லை என்று சொல்லி யிருப்பதைப்போல, அடிக்கடி நாசமில்லை என்று ஔபசாரிகமாகச் சொல்லி யிருக்கிறது என்றபடி. வெகுகால மிருக்கக் கூடியது என்பதுமேல் 'எனையூழி' என்பதினாலும் ஸூசிதம். எனை - எத்தனை, ஊழி - கல்பகாலம். இது அனுபவிக்குமிடம் பரமபத மில்லாமையாலும் ஔபசாரிகமென்ன வேண்டுமென்றருளிச் செய்கிறார்—'யோகிநாம்' என்றாரம்பித்து. ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம் - தன்னுடைய ஆத்மாவினிடத்தில் ஸந்தோஷத்தைச் செய்கிற, ஆநந்தத்தை யனுபவிக்கிற என்றபடி, யோகிநாம் - யோகிகளுக்கு. அம்ருதம் - அழிவில்லாத, ஸ்தாநம் - இடம், ஏகாந்திந: - பரமைகாந்திகளாய், ஸதா - எப்பொழுதும், ப்ரஹ்மத்யாயின: - பரமாத்மாவை த்யானம் செய்துகொண்டிருக்கிற, யோகின: யே - யோகிகள் எவர்களோ, தேஷாம் - அவர்களுக்கு, ஸூரய: -

---

1 திரு-6-9-10.
2 திரு-6-9-10.
3 வி-பு-1-6-38.
4 வி-பு-1-6-39.

பரமைகாந்திக்கு ஸமுசிதமான ஸ்தாநாந்தரஞ் சொல்லுகையாலே ஸித்தம். ஸம்வாத்யாதிவித்யாதிகளிற் சொன்ன ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தாநம்பண்ணு வார்க்கு ஶாஸ்த்ராதிகளிலே அர்ச்சிராதிகதியும் ப்ரஹ்ம ப்ராப்தியுஞ்சொல்லப்பட்டது. ஆகையால் இப்படி ஸ்வாத்ம வித்யாநிஷ்டர்க்கு அந்தராந்தராஹ பரமபதமானவாந்த ரஹமும் வந்தாலும் மதுவித்யா ந்யாயத்தாலே ப்ரஹ்ம ப்ராப்திவ்யக்தமாய்விடும். ப்ரதீகஸம்ஸ்ருஷ்டமாயா தல் ப்ரதீகவியுக்தமாயாதலிருக்கு மாத்ரவஸ்த்துவை ஸ்வரூபமாணவாதல் ப்ரஹ்மத்ருஷ்டியாலே யாதல் பண் ணும் அநுஸந்தாநங்கள் நாலுக்கும் நாமாத்யுபாஸந ங்களுக்குப்போலே அர்ச்சிராதிகதியும் ப்ரஹ்மப்ராப்தியு மில்லையென்னுமிடத்தை 1 'அப்ரதீகாலம்பநாந்நயதீ திபாதராயண உபயதா தோஷாத்தத்க்ரதுஶ்ச' என்

நித்யஸூரிகள், யத்ர-எந்த ஸ்தானத்தை, ஸதாபஶ்யந்தி- எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்கிறார்களோ, தத் - அப்ப டிப்பட்ட, பரமம் ஸ்தாநம் - உயர்ந்த இடம்(கிடைக்கிறது). ஸ்தாநாந்தரம் - கைவல்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட இடம். இப்படி கேவல கேவலனை நிரூபித்து கடைசியில் மோ க்ஷத்தை யடையக்கூடிய கேவலனை நிரூபித்தருளுகிறார்— 'ஸம்வாதி' என்றாரம்பித்து. 'ஆதி' பதம் கீதா பாஷ்யத் தைக் குறிக்கிறது. அவாந்தர - நடுவில் ஏற்படக்கூடிய. மதுவித்யாந்யாயத்தாலே - மதுவித்யையில் சில நாள் நடுவில் வஸுபதத்தில் இருப்பதைப்போல. நாமாத்யுபாஸநங் களுக்கு - நாமம் முதலியவைகளை ப்ரும்மமாக உபாஸிப்பதற்கு. அப்ரதீகாலம்பநாந் - 'ப்ரதீக'மாவது அவயவம், முழு வஸ்துவில் ஏகதேஶமென்றபடி. சேதனாசேதன ஶரீரக ப்ரும் மமாகிற ஒரு வஸ்துவின் ஏகதேசமான சேதனத்தையாவது அசேதனத்தையாவது உபாஸிப்பவர்கள் ப்ரதீகோபாஸகர்கள், அப்படியில்லாமல் பரிபூர்ணமான வஸ்துவை உபாஸிப்பவர் களை, நயதி - (அர்ச்சிஸ் முதலிய ஆதி வாஹிகர்கள்) அழைத்

1 ஶா-ஸூ-4-3-14.

கிற ஸூத்ரத்திலே யருளிச்செய்தார். [1] 'ஶ்ருதோபநிஷத்க கத்யபிதாநாச்ச' என்கிற ஸூத்ரத்திலும் ஒரு வித்யாவிஶேஷத்திலுபாஸகன் பரமாத்மாவென்கைக்கு அர்சிராதிகதி சொன்னதை ஹேதுவாகக் கொண்டு ஸாதிக்கையாலே ஜீவாத்மோபாஸகனுக்கு அர்சிராதி கதியில்லை யென்னுமிடம் ஸித்தமாயிற்று. ஆகையால் ப்ரஹ்மப்ராப்தியில்லாதார்க்கிச் ஶ்லோகத்திற் சொல்லுகிற ஸர்வபாப நிவ்ருத்தியில்லை. ஸர்வபாப நிவ்ருத்தியுடையார்க்கு ப்ரஹ்மாநுபவ ஸங்கோசமில்லை.

---

துப் போகிறார்கள், இதி - என்று, பாதராயண: - பாதராயணர் சொல்லுகிறார், உபயதா - இரண்டுவிதமாகச் சொல்லிலும், அதாவது கார்ய வஸ்துவை உபாஸிப்பவர்களை அழைத்துக்கொண்டு போகிறார்கள் என்றும், பரமாத்மாவை உபாஸிப்பவர்களேயே அழைத்துக்கொண்டு போகிறார்கள் என்றும் சொன்னால், தோஷாத் - உபநிஷத்துக்களுக்கு விரோதம் வருகிறபடியினால். முதல் பக்ஷத்தில் ஸத்வித்யாதிகளில் அப்படி அழைத்துப் போகிறான் என்று சொல்லி யிருப்பதற்கு விரோதமும், இரண்டாவது பக்ஷத்தில் பஞ்சாக்னி வித்யையில் ஆத்மப்ராப்தியைச் சொல்லியிருப்பதும் விரோதிக்கும். (அப்படிப் பரமாத்மாவைப்பற்றி உபாஸனம் செய்யாதவனுக்கு வருகிறதென்னில்) தத்க்ரதுஶ்ச - தத்க்ரது ந்யாயத்துக்கும் விரோதம் வருகிறது. மற்றொரு காரணம் அருளிச்செய்கிறார்—'ஶ்ருதோபநிஷத்க' என்றாரம்பித்து. ஶ்ருதோபநிஷத்க-உபநிஷத்துக் கேட்டவனுக்கு,அதாவது அதினால் ப்ரும்மோபாஸனம் செய்பவனுக்கு அநுஸந்தேயமான, கத்யபிதாநாத் - கதிஇந்த வித்யா நிஷ்டனுக்கும் சொல்லியிருப்பதினால். வித்யாவிஶேஷத்தில் - அக்ஷிவித்யையில். அந்தராதி கரணத்தில் இந்தக் கண்ணில் தோன்றும் புருஷனை உபாஸிக்கவேண்டுமென்று விதித்திருப்பதினால் அந்தப் புருஷன் ஜீவாத்மாவாபரமாத்மாவா என்று ஸந்தேஹம் வரில், ஜீவன் இல்லை பரமாத்மாவென்று நிரூபிப்பதற்காக இந்த ஸூத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. அர்ச்சிராதிகதி இவனுக்கு

---

1 ஶா-ஸூ-1-2-17.

இப்படி யிங்கு ஸர்வபாப நிவ்ருத்தியைச் சொல்லு கையாலே கேவலாத்மாநுபவத்துக்குக் காரணமாய் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்துக்குக் ப்ரதிபந்தக மான கர்ம விசேஷமுங் கழிகையாலே 'மாமேவை ஷ்யஸி' என்று கீழ் ச்லோகத்திற்சொன்ன அர்த்த மிங்கும் ஸித்தமாயிற்று. 'மாமேவைஷ்யஸி' என்கிற ப்ராப்தியாவது பரிபூர்ணாநுபவம். இப்பரி பூர்ணாநுபவ ஸித்திக்காக அர்ச்சிராதி கதியும் தேச விசேஷப்ராப்தியு முண்டாகிறது. இக்ஷணத்திலே யிவ்வநுபவங்கொடுப்பதாக ஸத்யஸங்கல்பனாக நிய மித்து வைத்தானென்னுமிடம் இக்கதி விசேஷாதி களைப் ப்ரதிபாதிக்கிற சாஸ்த்ரங்களாலே ஸித்தம். இக் கதி விசேஷத்துக்கு முன்பு சாஸ்த்ரத்தாலே ப்ரஹ்ம ஸ்வரூபத்தை யறிகிறபோதும் யோகத்தாலே ஸா க்ஷாத்கரிக்கிறபோதும் விபவ ரூபாதிகளில் ப்ரா

---

வரக்கூடியதாகசொல்லப்பட்டிருப்பதினுல் ஜீவாத்மாவல்லஎன்று தாத்பர்யம். ஸர்வ பாப மோக்ஷத்தைச் சொன்ன இடத்தில் மோக்ஷம் ஸித்தம் என்று நிகமித்தருளுகிருர்—'இப்படி' என்ருரம்பித்து. உபாஸனம் பண்ணும்பொழுதும் சாஸ்திரம் கொண்டறியும் பொழுதும் ப்ரும்மானுபவம் உண்டானபோதிலும் அது ப்ரும்ம ப்ராப்தியாகாது என்றருளிச் செய்கிருர்— 'மாமேவ' என்ருரம்பித்து. பரிபூர்ண - குண விபூத்யாதி களினுல் பூர்ணமான, இது கீழ்க்கூறிய தசைகளில்லை என்றபடி பரமபதம் ப்ராப்யமென்று சொல்லியிருக்க பரிபூர்ணனுபவம் ப்ராப்தியாகுமோ வென்னிலருளிச்செய்கிருர்—'இப்பரி பூர்ண' என்ருரம்பித்து. பரிபூர்ணனுபவம் இங்கேயே உண்டாகட்டுமே என்னில் அருளிச்செய்கிருர்—'இக்ஷணத்திலே' என்ருரம்பித்து. அர்ச்சிராதி மார்க்கத்தினுலே என்றபடி. 'சாஸ்த்ரங்களாலே' என்பதினுல் யுக்தி சொல்ல முடியாதென்பதும், இங்கேயே கொடுத்துவிட்டால் கதியைச் சொல்லும் சாஸ்திரம் வ்யர்த்தமாகும் என்பதும் த்யோதிதம். மற்ற தசைகளில் இப்படிப்பட்ட அனுபவம் இல்லையென்று நிரூபித்தருளுகிருர்—'இக்கதி' என்ருரம்பித்து. ஸாக்ஷாத்கரிக்

**விக்கும்போதும் பிறக்கும் ஆகாஶம் ஸாகூரதாயீந மாய் கரணாயத்தமாய் வருகிறதாகையாலே வரிமித முமாய் விஜ்ஹேவத்துமா யிருக்கும். ஊத்தேமெயிற் பிறக்கிற ஆகாஶம் ஸஜ்ஞாவ விஜ்ஹேஙங்களுக்குக் கார ண மொன்று மில்லாமையாலே வரிவண விஷய முமாய் வாநவிஜ்ஹேஷ ரஹிதமுமா யிருக்கும். இவ் வநாஹவ வரீவாஹமாய் 1 'கி்யதாமிதி ஊம வது' என் கிறபடியே ஶேஷியுகந்த வரிவண கைங்கர்யமும் வருகிறது. 'வாரணாயிக' என்கிற ஶ்ருதிவாக்யத்திற் சொன்ன ஹுவவுவரவவியெ யெல்லாம் இங்கே யமா ஆரணம் விவக்ஷிக்கப்படுகிறது.**

கும்போதும் - பரஜ்ஞானத்தில் என்றபடி. '**ஸாகூரதாயீந**' இத்யாதியால் இது ஸ்வத:ப்ராப்தமல்ல வென்பது த்யோதிதம். **கரணாயத்தமாய்**-இந்திரியத்துக்கு வசப்பட்டதாய். **வரிமித மாய்** - அல்பமாய், **விஜ்ஹேவத்துமாய்** - நடுவில் விடக்கூடியது மாய், ஸாக்ருதத்தினால் வருகிறபடியினாலும், இந்திரிய பாட வங்களுள்ள வரையில் தான் இருக்குமாகையினாலும் என்ற படி, **வாநவிஜ்ஹேஷக** - மறுபடி விட்டுப்போவது, கைங் கர்யமே புருஷார்த்தமாக ப்ரார்த்திக்கப்பட வேண்டியதாய் திரு மந்திராதிகளில் நிரூபித்திருக்க இங்கனுபவத்தைப் பலமாகச் சொல்லியிருப்பது விரோதிக்காதோ என்னில்? அருளிச்செய் கிறார்—'இவ்**வநாஹவ**' என்றாரம்பித்து. **வரீவாஹமாய்** - உள்ளடங்காமல் வெளியில் ஒரு வ்யாபாரமாய் வருகிறதாய். **ஊம** - என்னை (உமக்கு இஷ்டமான இடத்தில்), **கி்யதாம** - செய், **இதி** - என்று, **வது** - சொல். கைங்கர்ய பர்யந்த மாகும்படியான அனுபவம் பலமாகையினால் விரோதமில்லை யென்று திருவுள்ளம். இக்கைங்கர்ய விஶேஷங்களுக்கு ப்ரமாணம் காட்டியருளுகிறார்—'**வாரணாயிக**' என்றாரம் பித்து. '**ஶ்ருதி**' இத்யாதி-'**வாரணாயிக ஹுவவு ரணாரவிந்து** * * **கவிரதாஸ்ஸை**' என்ற வாக்யத்தில் என்றபடி. **விவ க்ஷிக்கப்படுகிறது** - குறிப்பாகக் காட்டப்படுகிறது.

1 ராமா-ஆர-15-7.

இனிமேல் 'மா ஶுச:' என்கிற வித்தாலே கீழருளிச்செய்த வசநத்தில் தீர்வு ப்ரகாஶிதமாகிறது.

மாஶுச: ஸப்தார்த்தம். சிலர் 'மா ஶுச:' என்கிற விதியாலே ப்ரபந்நனான பின்பு ஶோகிக்கை விஹிதாதிக்ரமணமாய் இவனை உபாயபூதனான ஶரண்யன் நெகிழ்ந்து தன் கார்யத்துக்குத்தானே கடவனாகை யாகிற ப்ரத்யவாயமுண்டாமென்று சொன்னவிடம் பாஷ்யவசநவ்யக்தார்த்தத்தையும் 'ஸவ்யாபாரேஹ்ய:' என்கிறவிடத்திலே கூட்டித் தாங்களே பண்ணின வ்யாக்யாநத்துக்கும், ப்ரபந்நனை ஸர்வஜ்ஞனொருபடி யாலுங் கைவிடானென்கிற வாக்யங்களுக்கும் விரோதமாம். ஆகையால் இவ்வுபாயத்தி லிழியுமவனுக்கு

---

கீழருளிச்செய்த - ஸர்வாநிஷ்டங்களையும் போக்கி மோக்ஷத்தைக் கொடுக்கிறேன் என்றபடி. தீர்வு-நிஶ்சயம். கீழ் ஸுகரோபாயத்தை உபதேஶித்ததாலே உண்டாகிய ஶோக நிவ்ருத்தியையே அனுவதித்து மஹா விஶ்வாஸம் உறுதிப்படுத்துவதற்காக என்றபடி. இது விதியாய், ஶோகியாவிடில் ப்ரத்யவாயம் வருமென்று சொல்லுகிற பக்ஷத்தை அனுவதித்து நிராகரித்தருளுகிறார்—'சிலர்' என்றாரம்பித்து. '**விதியாலே**' என்பதினால் அனுவாதம் என்பதை விட ஶ்லாக்யம் என்று பூர்வபக்ஷியின் தாத்பர்யம். **அதிக்ரமணம்** - மீறி நடக்கை. நெகிழ்ந்து - உபேக்ஷித்து. கடவன் – கடமைப்பட்டவன். இதற்கு ஸ்வவசன விரோதம் காட்டியருளுகிறார்— '**பாஷ்ய**' என்றாரம்பித்து. ஆஜ்ஞாதிலங்கனமும் புத்தி பூர்வோத்தராகமாகையினால் அது க்ஷமைக்கு விஷயம் என்றது விரோதிக்கும். ப்ரமாண விரோதம் காட்டி யருளுகிறார்— '**ப்ரபந்நனை**' என்றாரம்பித்து. **வாக்யங்களுக்கும்** - பகவானை யாஶ்ரயித்தவர்கள் யமலோகம் போகிறதில்லை என்று சொல்லுகிற ஶ்ருதிகளுக்கும், அதை யனுஸரித்த '**ஏவம் ஸாஜ்ஞ்யபரம்**' இத்யாதி ஸ்ம்ருதிகளுக்கும். ஆகையால் - விதியென்று சொல்லுவதில் ப்ரயோஜனமில்லாமையினாலும், ஸுகரூபமான உபாயத்தை யருளிச்செய்ததினால் உபாய தௌஷ்கர்ய ஶோகம் தானே நிவ்ருத்தித்தபடியாலும், ப்ரயோஜனத்

ஶோகஹேதுக்களெல்லாங் கழிகையாலே ஶோகிக்க வேண்டாவென்னு மிடத்தைச் சொல்லிக்கொண்டு விஶ்வாஸத்தை த்³ருடீ⁴கரிக்கையிலே தாத்பர்யம்.

ப³ந்து⁴நாஶாத³ய: பூர்வம் ப³ஹவ: ஶோகஹேதவ: |
தத்தத்ஸமுசிதை: ஸம்யகு³பதே³ஶைரபோஹிதா: ||

ஸுது³ஷ்கரத்வாத்³ த⁴ர்மாணாம் அபாரத்வாத்³ விரோதி⁴நாம் |
ஜாத: ப²லவிளம்பா³ச்ச ஶோகோ(அ)த்ர விநிவார்யதே ||

அஶக்த ஹேதுக்கு து³ஷ்கரஸாத⁴நமு மன்றிக்கே ஸர்வவிரோதி⁴நிவர்த்தநக்ஷமமுமாய் ப²லவிளம்ப³மு

---

தோடுகூடி யிருப்பதினுலும் அனுவாதம் என்று சொல்லுவது உசிதமாகையினுல். 'கழிகையாலே' என்பதினுல் விதிக்கவேண்டியதில்லை என்பது த்யோதிதம். **சொல்லிக்கொண்டு** – அனுவாதம் செய்துகொண்டு. **த்³ருடீ⁴கரிக்கை** - உறுதிப்படுத்துகை. அர்ஜுநனுக்கு பந்துநாஶாதிகளினுல் உண்டான துக்கமல்லவோ முதலில் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்க, அதைச் சொல்லாமல் மஹாவிஶ்வாஸம் த்ருடிக்ருதம் என்பது உசிதமாகுமோ வென்னவருளிச் செய்கிருர்—'**ப³ந்து⁴**' என்றுரம்பித்து.

ப–ரை] **பூர்வம்** – முன்புண்டான, **ப³ந்து⁴நாஶாத³ய:** - பந்துக்களின் நாசம் முதலிய, **ப³ஹவ:** - அனேகங்களான, **ஶோகஹேதவ:** – துக்கத்தின் காரணங்கள், **தத்தத்ஸமுசிதை:** – அந்தந்த ஸோகங்களைப் போக்கடிப்பதற்குத் தகுந்த, **உபதே³ஶை:** - உபதேசங்களால், **ஸம்யக்** - நன்ருக, **அபோஹிதா:** - போக்கடிக்கப்பட்டதுகள், **த⁴ர்மாணாம்** - தர்மங்களின், **ஸுது³ஷ்கரத்வாத்** - நம்மால் செய்யமுடியாதிருக்கும் தன்மையினுலும், **விரோதி⁴நாம்** - விரோதியான பாபங்களின், **அபாரத்வாத்** - அளவில்லாமலிருப்பதினுலும், **ப²லவிளம்பா³த்** - பலம் தாமதித்து உண்டாவதினுலும், **ஜாத:** - உண்டாகிய, **ஶோக:** - துக்கம், **அத்ர** - இந்த ஶ்லோகத்தில், **விநிவார்யதே** - தடுக்கப்படுகிறது. இதையே விஶதமாக நிரூபித்தருளுகிருர்—'**அஶக்த**' என்றுரம்பித்து. **து³ஷ்கரஸாத⁴நம்** - செய்யமுடியாத உபாயம். **உபதி³ஷ்ட**

மன்றிக்கே யிருக்கிற விவ்வுபாய விஶேஷமுபதிஷ்டமான பின்பு உபாயதௌஷ்கர்யாதிகளடியாக வுனக்கு ஶோகிக்கப் ப்ராப்தியில்லை. இவ்வுபாய மாஹாத்ம்யத்தால் உன்கார்யமுமெனக்கு ஸ்வார்த்தமாய் நானே ஸ்வயமுமாய் உன்னை ரக்ஷியாதபோது எனக்கவத்யமாம்படி யிருக்கும் தசையிலும் தநாதிதுல்யனான உனக்கு ஶோகிக்கப் ப்ராப்தியுண்டோவென்று திருவுள்ளம். இங்கு கழிக்கிற ஶோகம் ஸமாவஸ்திதாஸ்தாவஶோகாதிகளாலே கழிந்தவாஸுரவயாதி நிமித்தமானபழையஶோகமன்று. ப்ரகரணாநுகுணமான ஶோகாந்தரம். எங்ஙனே யென்னில்:— 1 'தைவீஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீமதா' என்று பிரித்துச் சொன்ன

---

மான - உபதேஶிக்கப்பட்ட. உன் கார்யமும் - உனக்கு இஷ்ட பலத்தைக் கொடுக்கை. 'நானே' இத்யாதியால் ஸ்வயம் ப்ரயோஜனமாய்ப் பகவான் பலம் கொடுக்கிறான் என்பது த்யோதிதம். அவத்யமாம்படி - தோஷமுண்டாகும்படி. தநாதி—'ஆதி' பதம் தான்யத்தைக் குறிக்கிறது. தனதான்யங்களை ஸ்வப்ரயோஜனத்துக்காக ரக்ஷிப்பதும், ரக்ஷியாவிடில் நஷ்டம் தனக்கே என்பதும் லோகத்தில் ஸித்தம். இந்த ஆகாரங்கள் உனக்கும் துல்யமாகையினால் நீ ஶோகிக்க வேண்டா என்றபடி. 'மாஶுச:' என்று கழிக்கப்படுகிறபடியினாலே கீழ் ஶோகமிருந்திருக்க வேண்டும், அப்படி இங்கு வ்யாக்யானம் செய்தபடி உபாய தௌஷ்கர்ய ஶோகம் சொல்லப்படவில்லையே, பந்துவிநாச ஶோகமே சொல்லப்பட்டிருக்கிறதே யென்னில் ஸமாதானமருளிச் செய்கிறார்—'இங்கு' என்றாரம்பித்து. கழிந்த - 'ந த்வம் ஶோசிதுமர்ஹஸி' என்கிறபடியே கழிந்தபடியாலே இங்கு மறுபடியும் கழிக்கவேண்டியதில்லை என்றபடி. ப்ரகரணாநுகுணமான - இந்த ப்ரகரணத்துக்குத் தகுந்ததான. தைவீஸம்பத் - தேவ ஸம்பத்து, விமோக்ஷாய - மோக்ஷத்துக்குக் காரணமாகிறது, ஆஸுரீ - ஆஸுர ப்ரக்ருதி, நிபந்தாய - ஸம்ஸார பந்தத்துக்குக் காரணமாக, மதா -

---

1 கீதை-16-5.

வாறே நாம் ஆஶ்ரயாதிகளாகிற் செய்வதென்னென்று ஶோகித்த அர்ஜுநனைப்பற்ற 1 'மாஶுச ஸம்பதம் தைவீம் அபிஜாதோஸி பாண்டவ' என்றாற்போலே இங்கு சீரிய ஹிதத்தில் தீவ்ர ஸங்கம் நடவா நிற்க அநாயாஸேந ஶக்யமாய் ஸர்வாதிகாரமாய் ஸாவதாநர்க்கும் துஷ்கரமான உபாயத்தையும் தன்னளவையும் கண்டு நமக்கிவ்வுபாயந் தலைக்கட்டியெங்கே யிப்பலஸித்தியுண்டாகப்புகுகிறதென்று ஶோகித்த அர்ஜுநனுக்கு க்ஷணகாலஸாத்யமாய் ஸர்வாந்தராயரஹிதமாய் ஸுகரமான உபாயத்தைக் காட்டிக்கொடுத்து அம்ஶத்தாலே பலஸித்தியில் நிர்ப்பரனுமாய் நிஸ்ஸம்ஶயனுமாம்படி பண்ணி 'மாஶுச:' என்று சொன்னால் இதுஉபாயாந்தரஶக்யத்வாதிகளடியாகப் பிறந்த ஶோகத்தைக் கழிக்கிறதா மித்தனையிறே. இப்பகவத்கீதையில் முற்பட ஆத்மதேஹ விவேகத்தை

எண்ணப்பட்டது. **பாண்டவ** - ஓ! பாண்டுவின் புத்திரனாகிய அர்ஜுநனே, **தைவீம்ஸம்பதம்** - தேவப்ரக்ருதியை, **அபிஜாதோஸி** — உத்தேஶித்துப் பிறந்தவனாகிறாய், **மாஶுச:** — துக்கிக்காதே. **என்றாற்போலே** — அங்கு நிவ்ருத்திக்கப்படும் ஶோகம் பந்துவிநாஶ துக்கமில்லை, அது 'தைவீமபிஜாத:' என்பதினால் நிவ்ருத்திக்கப்படாதது, ஆகையால் ப்ரகரணானுகுணமாகஶோகத்தைக் கல்பித்தாப்போலே. சீரிய-ஶ்லாக்யமான, **தீவ்ரஸங்கம்** — அதிக ஆசை. **ஶக்யமாய்** - அனுஷ்டிக்கக் கூடியதாய். **ஸாவதாநர்க்கும்** - ஸாவதானத்தோடு கூடினவர்களுக்கும், **துஷ்கரமான** - கஷ்டப்பட்டுச் செய்யக் கூடிய. இந்த ஶோகம் நிவ்ருத்திக்கக்கூடிய ஆகாரங்கள் இங்கு சொல்லப்பட்டிருப்பதை நிரூபித்தருளுகிறார்—'க்ஷண' என்றாரம்பித்து. **ஸர்வாந்தராயரஹித** - ஒரு விக்னமுமில்லாத, **கழிக்கிறதாமித்தனை** - கழிக்கிறதாக வேண்டியதே உசிதம். இப்படிப்பட்ட ஶோகமே இங்கு கழிக்கப்பட வேண்டுமென்பதற்காக முதலிலிருந்து பகவத் கீதா ப்ரகரணத்தை நிரூபித்தருளுகிறார்—'இப்பகவத்' என்றாரம்பித்து. உண்டாக்கி - 'நைவ

1 கீதை-16-5.

யுண்டாக்கிப் பின்பு ஸம்ஸாரமோக்ஷகாரணங்களான கர்மயோக ஜ்ஞாநயோகங்களையும் ஸாக்ஷாந்மோக்ஷஸாதநமாக வேதாந்தவிஹிதமான பக்தியோகத்தையும் ஸபரிகரமாக உபதேசித்து, 1 'இதி தே ஜ்ஞாநமாக்யாதம் குஹ்யாத்குஹ்யதரம் மயா। விம்ருஶ்யைதத³ஶேஷேண யதேச்ச²ஸி ததா² குரு ॥' என்றருளிச் செய்தவாறே அர்ஜுநனுடைய பாவத்திலுருவுதலைக் கண்டருளியிருக்கச்செய்தே கடுக ப்ரபத்த்யுபாயத்தை யருளிச்செய்யாதே, 2 'பரீக்ஷாஞ்ச பகவாந் கரோத்யத்ருடசேதஸாம்' என்கிற கட்டளையைக்கண்டருளி, நாம், இன்னதுனக்கு ஸாக்ஷாந்மோக்ஷஸாதநமான பரஹிதம், இத்தை அநுஷ்டாநமாகக் கணிசித்துஇதுக் கர்த்தவ்யமாக பத்தியென்று நிஷ்கர்ஷியாதே, 3 'ஏஷ பந்தா விதர்ப்பாணாம் ஏஷ யாஸ்யதி கோஸலாந்' என்னு

---

வாக்யம்' என்றாரம்பித்து 'ஏஷா ப்ரஹ்ரீ' இத்யந்தமாக உபதேசித்து என்றபடி. இதி - என்று, தே உனக்கு, குஹ்யாத் - ரஹஸ்யத்தைக் காட்டிலும், குஹ்யதரம் - மிகவும் ரஹஸ்யமான, ஜ்ஞாநம், மயா - என்னால், ஆக்யாதம் - சொல்லப்பட்டது. ஏதத் - இதை, அஶேஷேண - முழுமையும், விம்ருஶ்ய - பராமர்ஸித்து, யதேச்ச²ஸி - எப்படி இச்சைப் படுகிறாயோ, ததா² குரு - அப்படிச் செய். உருவுதல் - தீனனா யிருக்கை, வாட்டமாயிருக்கை என்றபடி. பகவாந் - பகவான், அத்ருடசேதஸாம் - உறுதியில்லாத மனதை உடையவர்களுக்கு, பரீக்ஷாஞ்ச - பரீக்ஷையையும், கரோதி - செய்கிறான். கட்டளையை - சொல்லியிருப்பதை, கண்டருளி - அநுஸந்தித்து, கணிசித்து - செய்ய வேண்டுமென்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு. நிஷ்கர்ஷியாதே-நிஷ்கர்ஷித்துச் சொல்லாமல். ஏஷ:-இது, விதர்ப்பாணாம் - விதர்ப்ப தேஸத்துக்கு, பந்தா - வழி, ஏஷ:, கோஸலாந் - கோஸல தேஸத்தைக் குறித்து, யாஸ்யதி.

---

1 கீதை-18-63. 2 வி-த-74-89. 3 பார-ஆர-50-48.

மாப்போலே உபேக்ஷகத்வஸம்ஶங்கை பண்ணலாம்படி 'யதேச்சஸி ததா குரு' என்று சொல்லித்தலைக்கட்டினேனென்று இது வ்யாஜமாக ஶோகித்தானென்று பாவித்து, இன்னமொரு நிலை பூயாம்ஸமான ஸித்தோபாயத்தை நிஷ்கர்ஷித்து உபதேசித்துப் பார்ப்போமென்று இதொரு விநோதத்தைக் கணிசித்தருளிப் பண்டுபதேசித்த ஸித்தோபாயந்தன்னையே 1 'ஸர்வகுஹ்யதமம் பூய:' என்று துடங்கியிரண்டு ஶ்லோகத்தாலே ஸாதராதரந்தோற்ற ஸ்ம்ருதிஜநகமாம்படி நிஷ்கர்ஷித்து நிகமிக்க அவ்வளவிலுமிவன் ஶோகமிரட்டித்துத்தோற்றின படியைக்கண்டருளின ஸாரதி ரூபனான ஸர்வேஶ்வரன் இனியிவன் பரமரஹஸ்யமாய திருவர்வான மோக்ஷோபாயத்தை உபதேசிக்கைக்கு பரிபக்வாத்மாவானானென்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்யப்புகுகிற சீரிய சரமோபாயத்துக்குப் ப்ரஶம்ஸாரூபமாக வொரு காருக்ஷேபம்

போகப் போகிறது, **உபேக்ஷகத்வஸம்ஶங்கைபண்ணலாம்படி**- உபேக்ஷித்துவிட்டான் என்று ஸந்தேஹிக்கும்படி. **பாவித்து**- தனக்கு அவன் ஶோகநிமித்தம் தெரிந்திருக்கச்செய்தே இதுவே ஶோக நிமித்தம் என்றயலாருக்குக் காண்பித்து. நிலை - தடவை, **விநோதத்தை**-மனதை ஶோதிக்கையாகிற லீலையை. **கணிசித்தருளி** - நினைத்து. பண்டு - முன்பு, ஒன்பதாவது அத்யாயத்தின் கடைசியில் என்றபடி **ஸர்வகுஹ்யதமம்** - எல்லாவற்றையும்விட மிகவும் ரஹஸ்யமான அர்த்தத்தை, **பூய:**-மறுபடியும் (உபதேசிக்கிறேன்). **ஸாதராதரம்** - தனக்கு அதில் மிகவும் ஆதரம் இருப்பதைக் காண்பித்துக்கொண்டு, ப்ரஶம்ஸையாக ஒரு ஶ்லோகம் அருளிச் செய்திருப்பதினால் ஆதரம் தோற்றுகிறது, **ஸ்ம்ருதிஜநகமாம்படி** - முன்பு சொன்னதே இது என்று அவனுக்கு ஜ்ஞாபகம் வரும்படி, கீழ் சொல்லப்பட்ட பதங்களையே மறுபடியும் சொல்லி இருப்பதினால் என்றபடி. **அருளிச்செய்யப்புகுகிற** - மேலே உபதேசிக்கப்போகிற, **ப்ரஶம்**

1 கீதை-18-63.

பண்ணாதே கடுக ஸகல ஸுலபமான ஸ்வவிஷய ஶரணாகதியை உபதேஶித்து இவனுடைய இஷ்டோதயத்துக்கும் ஸாரதியாய் ஸர்வஶோகத்தையுங் கழிக்கிறானாகையாலேயிங்கு நிவர்த்திக்கிற ஶோகம் பழைய ஶோகங்களில் வேறுபட்டதென்னுமிடம் ப்ரகரண ஸாமர்த்யத்தாலே ஸித்தம். உபாயாநுஷ்டான ரஹிதனானவனைக்குறித்து 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று விதித்த கட்டளையிலே ஸர்வஜ்ஞனான ஶக்தன் கையிலே பரஸமர்ப்பணம் பண்ணுகையாலும் ஸ்வதந்த்ர காருணிகனான ஶேஷி பரஸ்வீகாரம் பண்ணுகையாலும் இப்பூர்வஜனுக்கு இச்ஶ்லோகத்தில் பூர்வார்த்தத்திலே நிர்பரத்வமும் ஸர்வஶக்தியாய் ஸ்வீக்ருதபரனாய் ஆஶ்ரிதவிஷயத்தில் ஸத்யவாதியான ஶேஷி 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்றருளிச் செய்கையாலே ந்யஸ்தபரனான இவனுக்கினி ஶ்ரமாதி நாநாவித ப்ரத்யவாயஶங்கா ப்ரஸங்கமில்லாமையாலே நிர்பயத்வமும் இச்ஶ்லோகம் செம்மையுடைய திருவ

---

**ஸ்தோத்ரமாக** - ஸ்தோத்திரமாக. **காலக்ஷேபம்** - காலதாமதம். '**பண்ணாதே**' என்பதினால் ஒரு க்ஷணங்கூட ஆஶ்ரிதனுடைய துக்கத்தை ஸஹிக்க முடியாததான க்ருபாதிக்யம் சொல்லப்பட்டதாயிற்று. **இஷ்டோதயத்துக்கும்** - அபீஷ்ட பலத்துக்கும். **ஸாரதியாய்**-நியந்தாவாய், கொடுக்கிறவனாய் என்றபடி. சரமஶ்லோகத்தில் நிஸ்ஸம்ஶயத்வாதிகள் ஏற்படும் விதத்தை நிரூபித்தருளுகிறார்—'**உபாயாநு**' என்றாரம்பித்து. **நிர்பரத்வமும்** - தான் அஶக்தனாகையாலும், அஶக்தனுக்குக் கர்த்தவ்யமாக பரஸமர்ப்பணம் விதிக்கப்பட்டிருப்பதினாலும், ஶக்தனாய் காருணிகனான ஶேஷி பரத்தை ஒப்புக்கொண்டமையினாலும் என்றபடி. நாம் ஶக்தனாகவாவது, அவனுக்கு ஶக்தி இல்லாமையினாலாவது, கருணை யில்லாமையினாலாவது, ரக்ஷிக்க ப்ராப்தனில்லாமையினாலாவது, ஸ்வதந்திரனில்லாமையினாலாவது பரந்யாஸம் செய்யப்பட்ட விஷயத்தில் இனி பரம் இருக்க வேண்டியதில்லை என்றபடி. **நிர்பயத்வமும்**-பகவானுக்கு ஶக்தி

துர்ஜ்ஞேய: ஸதாம் தர்ம: ப்லவகை:' என்றும், 1 'தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்' என்றும், 2 'அணீயாந் க்ஷுரதாராயா: கோ தர்மம் வக்துமர்ஹதி' என்றும் ருஷிகளுக்குங்கூட வருந்தி பதவிந்யாஸம் பண்ண வேண்டியிருக்கிற நிலங்களில் 1 'மஹாஜநோ யேந கத: ஸ பந்தா:' என்றும், 3 'தர்மசாஸ்த்ர ரதாரூடா வேதகட்கதரா த்விஜா: | க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸ தர்ம: பர

---

துர்ஜ்ஞேய:-(ஆகையினால்) மிகவும் அறியமுடியாதது. தர்மஸ்ய - தர்மத்தினுடைய, தத்வம் - உண்மையானது, குஹாயாம் - ஒருவராலும் அறிய முடியாத இடத்தில், நிஹிதம் - வைக்கப்பட்டிருக்கிறது. (தர்மம்) க்ஷுரதாராயா: - கத்தியின் நுனியைப்பார்க்கிலும், அணீயாந்-மிகவும் கூர்மையுள்ளது, (ஆகையினால்) இஹ - இந்த லோகத்தில், க: - எவன், தர்மம்-தர்மத்தை, வக்தும் - சொல்லுவதற்கு, அர்ஹதி-யோக்யனாகிறான். வருந்தி-ப்ரயாஸைப்பட்டு. பதவிந்யாஸம்-அடிவைப்பு, நடக்கவேண்டிய என்றபடி. மஹாஜந: - பெரியோர்கள், யேந - எந்த வழியில், கத: - நடந்ததோ, நடந்தார்களோ என்றபடி, ஸ: - அது, பந்தா: - வழி. தர்மசாஸ்த்ரரதாரூடா: - தர்ம சாஸ்திரங்களாகிற தேரில் ஏறிக்கொண்டவர்களாயும், தர்ம சாஸ்திரங்களை உபதேசத்துக்கு ஆதாரமாய் வைத்துக்கொண்டவர்கள் என்றபடி, வேதகட்கதரா: - வேதமாகிற கத்தியை வைத்துக்கொண்டிருக்கிறவர்களாயுமிருக்கிற, தர்ம சாஸ்திரத்தில் ஸந்தேஹமுண்டானால் வேதங்களைக்கொண்டுநிவர்த்திக்கிறவர்களான என்றபடி, த்விஜா:-ப்ராம்மணர்கள், க்ரீடார்த்தமபி-விளையாட்டுக்காகவாவது, யத்-எந்த வார்த்தையை, ப்ரூயு:-சொல்லுவார்களோ, ஸ: - அது, பரம: - உயர்ந்த, தர்ம:-தர்மமாக, ஸ்ம்ருத: - எண்ணப்பட்டது. 'ச்ருதி' இத்யாதி—

---

1 பார-ஆர-314-119. 2 பார-உத்-35-29.
3 போதா-14-1-7.

ஶொ உத:॥' என்றுஞ் சொல்லுகிறபடியே ஶ்ருதிஸ்ம்ருதி ஶரணரான வஸ்வூர்வாசார்யர்கள் கண்டகஶோதநம் பண்ணி நடந்த வழியிலே நடக்கையாலே நமக்கு வருவதொரு தப்பில்லை. இவ்வழி நடந்தவர்களுக்கு 1 'அவிஶ்ராமமநாலம்பமபாதேயமதேஶிகம்। தம: காந்தாரமத்வாநம் கதமேகோ கமிஷ்யஸி ॥' என்றும், 2 'நிஷ்தீர்யே நிராலம்பே நிஶ்சாயே நிராஶ்ரயே। அதீவ்யஸ்யஸஹேமார்கே யமஸ்ய ஸதநம் ப்ரதி ॥' என்றும் உதாஹ்ருதங்கள் நெஞ்சாறல்படும் வழிகள் காணவேண்டா.

---

ஶ்ருதிஸ்ம்ருதிகளை ப்ரமாணமாகவுடையவர்களான. கண்டகஶோதநம் பண்ணி - முள்ளைப் பொறுக்கி ஶுத்தம் செய்து, மார்க்கத்தில் முள்ளைப்போல நல்வழி நடப்பதற்கு விரோதமான வாதிகளுடைய குயுக்திகளை நிரஸித்து என்றபடி. அவிஶ்ராமம் - இளைப்பாற இடமில்லாததாயும், அநாலம்பம்-பிடித்துக்கொள்ள தடி முதலிய ஆதாரம் ஒன்றும் இல்லாததாயும், அபாதேயம் - பசியை நிவ்ருத்திக்கக்கூடிய ஆஹாரம் முதலியதில்லாததாயும், அதேஶிகம் - வழியைக் காட்டக்கூடிய ஜனமில்லாததாயும், தம: காந்தாரம் - இருட்டால் மூடப்பட்டதும் காடுகள் நிறைந்ததுமான, அத்வாநம் - வழியை, நரகத்துக்குப்போகும் மார்க்கத்தை என்றபடி, ஏக: - ஒருவனாக, கதம் - எப்படி, கமிஷ்யஸி - போகப்போகிறாய். நிஷ்தீர்யே - தீர்த்தமில்லாததாயும், நிராலம்பே - பிடித்துக்கொள்வதற்கொன்றுமில்லாததாயும், நிஶ்சாயே-நிழலில்லாததாயும், நிராஶ்ரயே - உட்கார இடமில்லாததாயும், அஸஹே - துக்ககரமாயும், அதீவ்யஸி - மிகவும் நீண்டதாயுமிருக்கிற, யமஸ்ய ஸதநம் ப்ரதி - யமனுடைய வீட்டைக் குறித்துப் போகும், மார்கே - வழியில். நெஞ்சாறல்படும் - துக்கப்படும். ஸம்வாதவிதௌ - சாந்தோக்யத்தில் ஐந்தாவது ப்ர

1 பார-ஶா-337-34. 2 வங்கி-நித்.

வஞ்சாஷ்டிவிசேஷயிற் சொன்னபடியே பருத்திபட்ட பன்னிரண்டு பாடும்பட்டுப் பூட்டைக் குண்டிகைபோலே யேறுவதிழிவதாக ஸம்ஸாரசக்ரத்திலே வர்த்திக்கவும்வேண்டா. 1 'த்வம் ந்யஞ்சதீருஞ்சதீ: கர்மஸூத்ரோபபந்நா: । ஹரே விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:॥' என்கிற ஸம்வருஷ்யோவகரணமான உபசேஷ கழிந்து மற்றுள்ள வதிஶயிதஸுகங்கள் பெறப்போமயி காரிகளுடைய வழிகளிற் காட்டில் வாராஷாலஹேய ஹேதுயாலும், புநராவ்ருத்தி யில்லாமையாலும், 2 'தேஹாவிஶிஷ்டாம் ஜாநாதி மதிகேசஞிநாம் ந்ருணாம்',

---

பாடகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் ஜீவாத்மா புண்யங்களைச்செய்து ஸ்வர்க்காதிகளுக்குப்போகும் மார்க்கமும், புண்யபல மனுபவித்த பிறகு மறுபடியும் இந்த லோகத்துக்கு வரும் கஷ்டத்தையும் நிரூபித்திருக்கிறது. 'பருத்தி' இத்யாதி—பருத்தியிலிருந்து நூலிழுக்கும்பொழுது முதலில் கொட்டையை நீக்கிப்பன்னி, பட்டைபோட்டு மறுபடியும் குறுக்கும் நெடுக்குமாக பட்டைபோட்டு மாற்றப்படுவதுபோல. இப்படி பனிரண்டு தடவை செய்யப்படுகிறது, பாடு-ஶ்ரமம். பூட்டைக்குண்டிகை-ஏற்றச்சால், ஏறுவதிழிவதாக - ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் போவதும், மறுபடியும் கர்ம பூமிக்கு வருவதுமாக. இனி இந்த நல்வழி நடப்பவனுடைய ஸுகங்களை நிரூபித்தருளுகிறார்—'த்வம்' என்றாரம்பித்து. ஹரே-ஓ! பகவானே, த்வம்-நீர், ந்யஞ்சதீ:-கீழ் விழுகிறதுகளாயும், உதஞ்சதீ: - மேல் கிளம்புகிறவைகள்ளாயும், கர்மஸூத்ரோபபந்நா:-கர்மங்களாகிற கயிறுகளினால் கட்டப்பட்டவைகளாயுமிருக்கிற, ஜந்துபி: - ஜந்துக்களினால், க்ரீடாகந்துகைரிவ - விளையாட்டின் பொருட்டிருக்கிற பந்துகளினால்போல, விஹரஸி - விளையாடுகிறீர். 'மற்றுள்ள' இத்யாதி—ஸ்வர்க்காதி பலங்கள். ஸாகாஞ்சி

---

1 ஶேஷதர்மம். 2 பார. ஶா-358-6.

1 'உத்க்ராமதி ச ஸந்மார்க்க: ஶீதீபூதோ நிராஶய:', 2 'தேவயாந: பர: பந்தா யோகிநாம் க்லேஶஸம்க்ஷயே' இத்யாதிகளிற்படியே ஸத்த்வ விஶிஷ்டமாய், 3 'ஆத்மா கைவல்யதாம் ப்ராப்தோ யத்ர கத்வா ந ஶோசதி', 3 'ஸூர்யாக்நியதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந: ॥ ஸ்வயைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷம் தேவதாநவை:। யத்ர கத்வா புநர்ஜந்ம நோபயாந்தி ச பாரத ॥', 4 'ஸந்தேவே

---

நாம் - பரமைகாந்திகளான, ந்ருணாம் - மனிதர்களுடைய, கதிம் - கதியை, தேப்ய: - மற்றக் கதிகளைக்காட்டிலும், விஶிஷ்டாம் - உயர்ந்ததாக, ஜாநாமி - அறிகிறேன். ஶீதீபூத: - மிகவும் குளிர்ச்சியுடையவனாய், ஸாம்ஸாரிக தாபங்களிலிருந்து விடுபட்டவனாய் என்றபடி, நிராஶய: - துக்கங்களொன்று மில்லாதவனாய், ஸந்மார்க்க: - நல்ல வழியையடைகிறவனாய், உத்க்ராமதி-ஶரீரத்தைவிட்டுவெளிக்கிளம்புகிறான். யோகிநாம்-யோகிகளுக்கு, க்லேஶஸம்க்ஷயே - கஷ்டங்கள் நிவ்ருத்தி யடையும்போது, ப்ராரப்தகர்மத்தின் முடிவில் என்றபடி, தேவயாந: - தேவயானம் என்று சொல்லப்பட்ட, பர: - உத்தமமான, பந்தா: - மார்க்கம். கைவல்யதாம் - அவித்யாதி களில்லாமலிருக்கையை, ப்ராப்த: - அடைந்திருக்கிற, ஆத்மா- ஜீவாத்மாவானவன், யத்ர - எந்த இடத்தில், கத்வா-போய், ந ஶோசதி - துக்கிக்கிறதில்லையோ, ஸூர்யாக்நியதீப்தம் - ஸூர்யன் அக்னி இவர்களுக்கு மேல்பட்டு ப்ரகாசித்துக்கொண் டிருக்கிற, விஷ்ணோர்மஹாத்மந: - மஹாத்மாவாகிய விஷ்ணு வின் இடமானது, ஸ்வயைவ - தன்னுடைய, ப்ரபயா - காந்தியினாலே, தேவதாநவை: - தேவதைகளினாலும் அஸு ரர்களினாலும், துஷ்ப்ரேக்ஷம்-பார்க்க முடியாதது, யத்ர கத்வா- எந்த லோகத்தில்போய், பாரத - பரதவம்ஶத்தில் பிறந்த

---

1 பார-ஶா-194-27. 2

3 பார-ஶா-196-11, ஆர-136-18-23. 4 1255-ம் பக்கம் பார்க்க.

நிரயாஸ்நாதஸ்நாநஸ்ய பாரகாதநஃ ' இத்யாதிகளிலும் ஸம்ஸாராநலவுக்கு பாரமென்று ஶ்ருதிகளிலுமோதப் படுகிற பரமபதத்தை பர்யந்தமாக வுடைத்தாய், ஸம வஸ்த்ரஸாதநவுமானமாய், பரிபூர்ணமான பரம ஸாம்யத்தைப் பெறப்புகுகிறேனென்கிற ஸந்தோ ஷத்தை வாயமாக வுடைத்தாய், 1 'தஸ்யகாஶித ஆரஃ' என்கிறபடியே ஹார்த்தனான வீஶ்வரனுடைய ஸௌஹார்த்தத்தாலே காட்டப்படுகிற வசிராதிமார்க்கத் தாலே அவ்வோதேவதைகள் தந்தாமெல்லைகள்தோ றும் உஜ்ஜ்வலதீப பூர்ணகும்பாதிகளை முன்னிட்டு ஸபரிகரரா யெதிர்கொண்டு ஸாவதானமாய் ஸேவாதிகளைப் பண்ணி வழிநடத்த, கர்மலோகத்திலிருந்த நாள் இறைகொண்ட தேவதைகளெல்லாங் காணிக்கையிட் டுக் கண்டநுபவிக்க, அவர்களுக்கு மெட்டவொண் ணாத வெல்லைகளெல்லாங் கடந்து, நித்யஸூரிகள் திரளிற்புக்கால் வாசிதெரியாதபடியான நிரதிஶயவஸ்

---

ராஜாவே, இமம் லோகம் - இந்த லோகத்தைக் குறித்து, நாயாதி - திரும்பி வருகிறதில்லையோ. பர்யந்தமாக-கடைசி யாக. 'பரமபத' இத்யாதி 'ஆஸீநஸ்' இத்யாதிக்கும் 'ஸமவஸ்த்ரஸாத' இத்யாதி 'நிராமயம்' இத்யாதிக்கும் 'ஸந்தோஷத்தை' இத்யாதி 'சுவாமேயம்' என்பதற்கும், 'ஹா ர்த்த' இத்யாதி 'சுதேஶிகம்' என்பதற்கும் எதிர்த்தட்டு. இறைக் கோண்ட - இவனிடமிருந்து பூஜாதிகளையடைந்த. காணிக்கை யிட்டு - உபஹாரங்களை ஸமர்ப்பித்து. வாசி - வ்யத்யாஸம், வஸ்திர - ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய தேஜஸ்ஸு முதலியவைகள். பரமபதத்தில் திவ்ய ஸிம்ஹாஸநத்தில் எழுந் தருளியிருக்கும் பகவானை அனுபவிக்கப்பெறுவன் என்றருளிச் செய்யப்போகிறவராய் அப்படி வீற்றிருக்கும் வைலக்ஷண்யத்தை

---

1 ஶா-ஸ-42-16.

தியைப் பெற்று, 1 ‘ததோ மஹதி பர்யங்கே மணிகாஞ்சநசித்ரிதே। மேரௌ க்ருஷ்ணாஸீநம் நீலம் ஜீமூதமிவாம்பரே॥ ப்ராஜமாநம் வபுஷா திவ்யாபரணபூஷிதம்। பீதகௌஸேயஸம்வீதம் ஹேம்நீவோபசிதம் மணிம்॥ கௌஸ்துபேந உரஸ்யேந மணிநாபிவிராஜிதம்। உத்யதே வோதயம் ஸைலம் ஸூர்யேணாவ்ருதம் கிரீடிநம்॥ நாவ

---

வேறொருவிதமாகக் காட்டுவது அஸம்பாவிதமாகையினாலே அவதாரதசைகளில் சில ஸந்தர்ப்பங்களில் ஸேவை ஸாதித்திருப்பதை மஹர்ஷிகள் அனுபவித்திருப்பதைக்கொண்டு ஸுலபமாக புத்திக்கு கோசரமாக்குவதற்காக நிரூபித்தருளுகிறார்—‘ததஃ’ என்றாரம்பித்து. ததஃ - பிற்பாடு, மணிகாஞ்சநசித்ரிதே-ரத்னங்களாலும், ஸுவர்ணத்தாலும் அதிவிசித்ரமாகச் செய்யப்பட்ட, மஹதி-பெரிய, ஔன்னத்யவிஸாலத்வாதிகளோடுகூடிய என்றபடி, பர்யங்கே - ஸிம்ஹாஸனத்தில், மேரௌ - மேருபர்வதத்தில், நீலம்-மிகவும் கறுத்ததான, ஜீமூதம் இவ-மேகத்தைப்போல, வபுஷா - தம்முடைய திருமேனியினால், ப்ராஜமாநம் - ப்ரகாஸித்துக்கொண்டும், திவ்யாபரணபூஷிதம் - மிகவும் உயர்ந்த ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டுப், பீதகௌஸேய ஸம்வீதம் - மஞ்சள் நிறமான பட்டினால் திருவரையில் சுற்றப்பட்டும், ஹேம்நி - தங்கத்தில், உபசிதம் - இழைக்கப்பட்ட, மணிம் - நீலரத்னம்போலிருக்கிற, உரஸ்யேந - திருமார்பிலிருக்கிற, கௌஸ்துபேந - கௌஸ்துபத்தினால், அபிவிராஜிதம் - திருமேனியெங்கும் ப்ரகாசம் செய்யப்பட்டும, உத்யதா - உதித்துக்கொண்டிருக்கிற, ஸூர்யேண - ஸூர்யனால், ஆவ்ருதம் - வ்யாபரிக்கப்பட்டிருக்கிற, உதயம் ஸைலம் இவ-உதய பர்வதத்தைப்போலவும், கிரீடிநம் - கிரீடத்தைத் தரித்துக்கொண்டுமிருக்கிற, கிரீடத்துக்கு ஸத்ருஸமான த்ருஷ்டாந்தமில்லாமையினால் சொல்லப்படவில்லை,

---

1 பார ஸா-44-13-16.

த்ரும் வித்யதே தஸ்ய த்ரிஷு லோகேஷு கிஞ்சந।', 1 'தம் வைஶ்ரவணஸங்காஶ முபவிஷ்டம் ஸ்வலங்க்ருதம் । ததர்ஶ ஸூத: பர்யங்கே ஸௌவர்ணே ஸோத்தரச்சதே ॥ வராஹருதிராபேண ஶுசிநா ச ஸுகந்திநா । அநுலிப்தம் பரார்த்யேந சந்தநேந பரந்தபம் ॥ ஸ்திதயா பார்ஶ்வத

க்ருஷ்ணம் - ஸ்ரீ க்ருஷ்ணனை, ததர்ஶ - பார்த்தார், த்ரிஷு லோகேஷு - மூன்று லோகங்களிலும், கிஞ்சந-ஒன்றும், தஸ்ய- அவனுக்கு, ஶாத்ரவம் - ஸத்ருஶமாக, நவித்யதே - இல்லை. அன்றிக்கே மூன்று லோகங்களிலும் அந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய ஸாத்ருஶ்யம் (ஸத்ருஶமாயிருக்கை) கொஞ்சமும் இல்லை என்றர்த்தமாகவும். ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில் பகவத்ஸேவை மாத்திரம் நிரூபிக்கப்பட்டதினால் அதில் த்ருப்தி இல்லாமல் 'தயாஸஹாஸீநம்', 'கோலத்திருமாமகளோடுன்னை' இத்யாதிகளில் பரக்கப்பேசப்பட்ட பரமபதராஸிகைக்கு ஸத்ருஶமாய் பிராட்டி ஸாந்நித்யத்தினால் விஶேஷ மஹிமையையுடைய அவதாராஸிகையை நிரூபித்தருளுகிறார்—'தம்' என்றாரம்பித்து. ஸூத: - ஸாரதியான ஸுமந்திரர், ஸௌவர்ணே-ஸுவர்ணமயமாயும், ஸோத்தரச்சதே - மேலே போடப்பட்ட மெத்தையோடுகூடியதுமான, பர்யங்கே-ஸிம்ஹாஸநத்தில், உபவிஷ்டம்-உட்கார்ந்துகொண்டிருப்பவராயும், வைஶ்ரவணஸங்காஶம்-குபேரனுக்கு ஸமமாக ப்ரகாசித்துக்கொண்டிருப்பவராயும், ஸ்வலங்க்ருதம் - நன்றாக அலங்கரிக்கப்பட்டவராயும், வராஹருதிராபேண - பன்னிரத்தம்போன்ற வர்ணத்தையுடையதாயும், ஶுசிநா - பரிசுத்தமானதாயும், ஸுகந்திநா - நல்ல வாஸனையுடையதாயும், பரார்த்யேந - மிகவும் உயர்ந்ததாயுமிருக்கிற, சந்தநேந-சந்தனத்தினால், அநுலிப்தம் - பூசப்பட்டவராயும், பரந்தபம் - (இப்படிப்பட்ட அழகாலே) ஶத்ருக்களை ஜயிக்கக்கூடியவராயும், 'எவிற்றுச் செய்வா னென்றெதிர்ந்துவந்த மல்லரை சாவத்தகர்த்த சாந்தணி தோள் சதுரன்மலை' என்பதிங் கனுஸந்தேயம், பார்ஶ்வத: -

1 ராமா-அயோ-16-8-11.

ஸ்திதயாபி சாமரஹஸ்தயா । உபேதம் ஸீதயா பூய: சித்ரயா சசினம் யதா ॥ தம் தபந்தமிவாதித்யமுபபந்நம் ஸ்வதேஜஸா । வவந்தே வரதம் வந்தீ விநயஜ்ஞோ விநீதவத் ॥' என்று ஸாரத ராமாயணங்களிற் சொல்லப்பட்ட அவதாராஸிகையாலே ப்ரகடிதமான ராஜ்யவைபவஸமயத்திலே யெழுந்தருளியிருக்கிற ஸபத்நீகனான ஸர்வேச்வரன் தாளிணைக்கீழ் 1 'ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்ய வேண்டு நாம்' என்கிற மநோரதத்தின்படியே ஸர்வதேச ஸர்வகால ஸர்வா

---

பக்கத்தில், ஸ்திதயா - நிற்கிற, சாமரஹஸ்தயா-சாமரத்தைக் கையில் தரித்துக்கொண்டிருக்கிற, ஸீதயா-ஸீதையுடன், சித்ரயா - சித்ராநக்ஷத்திரத்துடன், சசினம் யதா - சந்திரனைப்போல, பூய: - அதிகமாக, உபேதம் - சேர்ந்துகொண்டிருக்கிற, 'அபி, பூய:' என்கிற பதங்களினால் திருமேனி காந்தியையும், ஆபரணங்களின் சேர்த்தியையும், சந்தனாதி அலங்கார விசேஷங்களையும் அஸத்கல்பங்களாக்கக்கூடிய பிராட்டி ஸந்நிதியினால் உண்டான ஸௌந்தர்யாதிசயம் சொல்லப்படுகிறது, தபந்தம் - தபித்துக்கொண்டிருக்கிற, ஆதித்யமிவ-ஸூர்யனைப்போல, ஸ்வதேஜஸா - தனக்கு அஸாதாரணமான தேஜஸ்ஸினால், உபபந்நம் - நிறைந்த, தம் - அந்த, வரதம் -வரத்தைக் கொடுக்கிறவனை, ராமம்- ஸ்ரீ ராமனை, ததர்ச-பார்த்தார், வந்தீ-பகவானை ஸ்தோத்திரம் செய்வதையே ஸ்வபாவமாகவுடையவராயும், விநயஜ்ஞ:-விநயம் தெரிந்தவராயுமிருக்கிற ஸுமந்த்ரர், விநீதவத்-வணக்கத்துடன், வவந்தே-ஸேவித்தார். அவதாராஸிகை - அவதாரதசைகளில் வீற்றிருந்த தசைகள். ப்ரகடிதமான - ப்ரகாசம் செய்யப்பட்ட, ஊஹித்தறியப்பட்ட என்றபடி. 'ஸ்வஸ்ராவே ஸாயநம் வ ஸயதி ஹிவாஸ ஸஹ தத்ராபி விஷ்ணும்', 'தேவ: ஸ்ரீமாந் ஸ்வதாம்நி க்ரீடதீதி வதந்தேகடியம் ஸஹஸ்ரம்' இத்யாதிகளிற்படியே உபய வேதாந்தங்களிலும்

---

1 4:5-ம் பக்கம் பார்க்க.

வஷ்டூாவித ஸவஙுவிய கைஜ்ஜயஙுங்களேயும் பெற்று வாழ்வர்கள். இப்படி ஸ்ரீயஃபதியான நாராயணன் திருவடிகளே உபாயதஶையிலும் ஃபலதஶையிலு முபஜீவ்யங்கள்.

உறுசகட முடையவொரு காலுற்றுணர்ந்தன
உடன்மருத மொடியவொரு போதிற்றவழ்ந்தன
உறிதடவு மளவிலுரலூடுற்று(டொத்து)நின்றன
உறுநெறியோர் தருமன்விடு தூதுக்குகந்தன
மறநெறியர் முறியபிரதானத்து வந்தன
மலர்மகள் கைவருட மலர்போதிற் சிவந்தன
மறுபிறவியறு முனிவர் மாலுக்கிசைந்தன
மனுமுறையில் வருவதோர் விமானத்துறைந்தன
அறமுடைய விசயனமர் தேறிற்றிகழ்ந்தன
அடலுரகபட மடியவாடிக் கடிந்தன
அறுசமயமறிவரியதானத் தமர்ந்தன
அணிகுருகை நகர்முருக நாவுக்கமைந்தன
வெறியுடைய துளவமலர் வீறுக்கணிந்தன
விழுகரியோர் குமரனென மேவிச்சிறந்தன
விரலசுரர் படையடைய வீயத்துடர்ந்தன
விடலரிய பெரியபெருமாள் மெய்ப்பதங்களே. 51

---

ப்ரதிபாதிக்கப்பட்ட அர்த்தங்களே இப்படி இந்த ப்ரபந்தத்தில் கீழ் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்ட அர்த்தமென்று அதிஸங்க்ரஹமாய் நிரூபித்தருளுகிறார்— 'இப்படி' என்றாரம்பித்து. உபஜீவ்யங்கள் - உபாயமாயும் ப்ராப்யமாகவும ஆஶ்ரயிக்கத்தக்கவைகள். கீழ் 'ஶ்ரீமதே' என்று உபக்ரமிக்கப்பட்டதே நிகமனம் செய்யப்பட்டதாகிறது.

இப்படி உபாயோபேயதஶைகளில் ஶ்ரிய:பதியின் திருவடிகளே உபஜீவ்யமென்பது ஸங்கதமாகுமோ? ப்ராப்யதஶையில் பரமபதநாதன் திருவடிகளன்றோ உபஜீவ்யம்? ராமக்ருஷ்ணவதாரங்கள் காலவிப்ரகர்ஷத்தினால் ஆஶ்ரயிக்கமுடியாதே

என்னில்? அவ்விரண்டாகாரங்களும் பொருந்திய அர்ச்சாவதாரம் கொண்டிருக்கும் பகவானுடைய திருவடிகளே உபஜீவ்யம் என்று திருவுள்ளத்தில்கொண்டு திவ்யஸ்தலங்களுக்கு உபலக்ஷணமாக ஸ்ரீரங்கத்தில் ஸாந்நித்யமடைந்திருக்கும் பெரிய பெருமாள் திருவடிகளே உபஜீவ்யமென்று ஸமாதானமருளிச் செய்கிறார்— 'உறு' என்றாரம்பித்து.

ப—ரை] விடலரிய-விடமுடியாததான, மேல் அருளிச்செய்யப்படுகிற ஸர்வரக்ஷகத்வம், ஸர்வபாப நிவர்த்தகத்வம், ஸௌலப்யம், ஸௌஸீல்யம், ஆஸ்ரிதரக்ஷண ப்ரதிஷ்டிதத்வாதிகள், ஸம்ஸாரபந்த நிவர்த்தகத்வம், ஆழ்வாருடைய உகப்பினால் நமக்கு குலதனமாயிருக்கை, போக்யத்வாதிஸயங்கள் முதலியவைகளினால் ஒருதரம் அனுபவிக்கப்பட்ட பிறகு என்றபடி, பெரியபெருமாள்-ஸ்ரீரங்கநாதனுடைய, மெய்ப்பதங்களே - ஆஸ்ரிதர்கள் விஷயத்தில் மெய்யான திருவடிகளே, இத்தால் ப்ராப்யத்வ ப்ராபகத்வோபயுக்த குணவிஸேஷங்களோடு கூடினவைகளாகையினால் திருவடிகளே உத்தேஸ்யங்கள் என்பது த்யோதிதம், உறு-மிகவும் பலிஷ்டமான, சகடம், உடைய - முறியும்படி, ஒருகால் - ஒரு ஸமயத்தில், அன்றிக்கே ஒருதடவை, உற்று - ஸ்பர்ஸித்து, உணர்ந்தன - விழித்துக்கொண்டதுகள், அன்றிக்கே ஜாகரூகங்களாயிருந்ததுகள், அஸுராவேஸத்தினால் ஸ்ரீ க்ருஷ்ணனை ஹிம்ஸிக்கவேண்டுமென்பதில் பூர்ண நிஸ்சயத்துடன் வந்தவலி 'உறு' என்றருளிச் செய்யப்பட்டது. 'ஒருகால்' என்பதினால் அப்படிப் ப்லிஷ்டமான சகடமும், அதிலிருந்த அஸுரனும் அதி ஸுகுமாரமான திருவடிகள் ஒருதடவை தொட்டதினால் முறிந்தது என்கிற ஆஸ்சர்யம் த்யோதிதம். ஸர்வ ரக்ஷகனாய் ஸர்வஜ்ஞனான பகவான் தன்னை ரக்ஷித்துக்கொள்ள கைதப்பினபோது திருவடிகள் அவனையும் ரக்ஷித்தது, என்கிறபடியினால் திருவடிகளின் உபாயத்வம் ஸூசிதம். உற்று - ஸாவதானமாக, உணர்ந்தன, என்கிற யோஜனையில் ரக்ஷகத்வமாகிற தங்களுடைய க்ருத்யத்தில் தாங்கள் ஜாகரூகங்களாக இருந்தன என்ற

படி. **உடன் மருதம்**-'புணரேய் நின்ற' இத்யாதிகளிற்படியே (நடுவில் இடைவெளியில்லாமல்) ஒன்று சேர்ந்திருக்கிற மருதமரங்கள், **ஒடிய** - முறிந்துவிழ, **ஒருபோதில்** - ஒருஸமயத்தில், **தவழ்ந்தன**, பாபத்தினுல் ஸ்தாவரஜன்மத்தை யடைந்தவர்களுக்கு அதை விமோசனம் செய்தமையால் பாபநிவர்த்தகத்வம் சொல்லப்பட்டதாகிறது. **உறிதடவுமளவில்**-உறிகளைத் தடவும்பொழுது, **உரலூடு** - உரலுடன், **உற்று**-சேர்ந்து, (**ஒத்து**-ஸத்ருஸங்களாக), **நின்றன**, வெண்ணெய்திருட ஆரம்பித்து அதைத்தலைக்கட்டவும் மாட்டாதே, தான் அகப்பட்டு உரலோடு கட்டப்பட்டு நிற்கும்பொழுது அசேதனமான உரலுக்கும் தனக்கும் வ்யத்யாஸம் இல்லாமல் நின்றமை என்று அபிப்ராயம். க்ருஷ்ணனுக்காகப் பயந்து இருட்டறையில் வைக்கப்பட்டிருந்ததினுல் '**தடவும்**' என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. 'பின்னு மகம்புக்கு உறியைநோக்கி பிறங்கொளி வெண்ணெயும் சோதிக்கின்றான்' என்றுறிறே. 'உரலினோடிணைந் திருந்தேங்கிய வெளிவு' என்றது இங்கனுஸந்தேயம், அன்றிக்கே உன்னத ஸ்தானத்திலிருந்தமையினுல் அவைகளை எட்டுவதற்காக 'பொத்தவுரலைக் கவிழ்த்ததன் மேலேறி தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணையும் மெத்தத்திருவயிராற விழுங்கிய அத்தன்' என்கிறபடியே உரலின்மேல் ஏறிநின்றமை சொல்லப்பட்டதாகவுமாம். இத்தால் அநந்யர்களுக்கு இஷ்டபலம் கொடுத்தமை த்யோதிதம். **உறு** - யோக்யமான, **நெறி** - மார்க்கத்தையுடைய, ஸத்யமார்க்கத்தையுடைய என்றபடி, **ஓர்** - அத்விதீயமான, **தருமன்** - தருமபுத்திரரால், **விடு** - அனுப்பப்பட்ட, **தூது** - தூதக்ருத்யத்துக்கு, **உகந்தன** - ப்ரீதியுடன் ஒப்புக்கொண்டன, பெறுப்பேறுகப் பாவித்து ஸந்தோஷித்ததுகள் என்றபடி. இத்தால் ஸௌலப்யாதிகள் த்யோதிதம். **மற** - கோபத்தை, **நெறியர்** - மார்க்கமாகவுடையவர், 'விபரீதஸ்வபாவாஸுரா:' என்கிற ஆஸுர ப்ரக்ருதிகள் என்றபடி, **முறிய** - நசிக்கும்படி, **பிரதானத்து** - ப்ருந்தாவனத்தில், **வந்தன**, அன்றிக்கே **உவந்தன** - ப்ரீதி பண்ணினதுகள் என்றுகவுமாம். ப்ருந்தாவனத்தில் ஜங்கமஸ்தாவர வேஷம் பூண்டு நிற்கும் அஸு

ரர்கள் நாசம் அடைவதற்காக என்றபடி, 'வைநதாவநம் ஹமவ தா கூரெஷ் நாகிஷ்கூடிணா। ஸுஜெ ந உநஸா யூதம் மவாஂ வநூஜி உஹீஷ் தா॥' என்பது அநுஸந்தேயம். மலர்மகள் - லக்ஷ்மீ, கை வருட - திருக்கைகளினால் தடவிக்கொடுக்க, மலர்போதில்-மலர்ந்த தாமரைப் புஷ்பத்தைக் காட்டிலும், அன்றிக்கே அப்பொழுது தான் மலர்ந்துகொண்டிருக்கிற, 'வாஞாஸஷுஷெவ' இத்யாதி களிற்படியே அத்யந்த ஸுகுமாரமான பெரிய பிராட்டியார் கை பட்டபோதிலும், 'சிவந்தன' வாகையினால் ஸௌகுமார்யாதி ஶயம் த்யோதிதம். மறுபிறவி - அடுத்த ஜன்மத்தை, அறு-அறுக் கக்கூடிய, இது 'மாலுக்கு' விஶேஷணம், முனிவர் - மகரிஷிக ளுடைய, மாலுக்கு - பரமபக்திக்கு, இசைந்தன - அநுரூபங்களா யிருந்ததுகள். ஸ்வயம் போக்யங்களாகையாலே அவர்கள் விட வொண்ணாமல் நிரந்தரம் த்யானம் செய்தார்கள் என்பதும், ப்ர யோஜனாந்தரத்துக்காகச் செய்யவில்லை என்பதும் த்யோதிதம். திருவடிகளின் ப்ரபாவத்தாலே ஸம்ஸாரம் தன்னடையே கழிந்தது என்றபடி. 'ஒருபொருட் கசைவோரசைக' இத்யாதி இங்கனுஸந்தேயம். மனுமுறையில்-மனுவின் வம்ஶத்தில், வருவது- ஆராத்யமாக வந்துகொண்டிருக்கிற, ஓர் - அத்விதீயமான, விமா னத்து - ப்ரணவாகார திவ்யவிமானத்துள், உறைந்தன-இருந்தன, ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்போல தீர்த்தம் ப்ரஸாதித்துப் போருகையன்றிக்கே சேதனர்களெல்லாரையும் உஜ்ஜீவிக்கச் செய்தல்லது போகிறதில்லை என்று ஸ்திர ப்ரதிஷ்டிதமாய் இருப் பது த்யோதிதம். அறமுடைய - தர்மத்தையுடைய, அதைச் செய்யவேண்டுமென்கிற ஆசையுடைய, விசயன் - அர்ஜுநன், அமர்தேரில் - பாரத யுத்தத்துக்காக ஏற்படுத்தப்பட்ட தேரில், திகழ்ந்தன - ப்ரகாசித்தன, 'விசயனமர்தேர்' என்பதினால் அர்ஜு நன் ரதிகனாய் பகவான் ஸாரதியாய் நின்ற நிலை த்யோதிதமாய் ஸௌஶீல்யாதிகள் ப்ரகாசம் செய்யப்பட்டன. 'தேருமூர்ந்து தேசுயர்ந்த' இத்யாதி அநுஸந்தேயம். அடல் - ஹிம்ஸிப்பதை ஸ்வபாவமாகவுடைய, உரகபடம் - காளியனுடைய படம், மடிய-

மடிந்துபோம்படி, ஆடி - நர்த்தனம் பண்ணி, **கடிந்தன** - கோபித்துக்கொண்டன, காளீய நிரஸனம் சொல்லப்பட்டதாகிறது. **அறுசமயம்** - ஆறு மதங்களினாலும், **அறிவரிய** - அறியமுடியாத, **தானத்து** - ஸ்தானத்திலே, பரமபதத்திலே என்றபடி, **அமர்ந்தன** - ப்ரதிஷ்டிதமாய் நின்றன, **அணிதுருகைநகர்** - பூமண்டலத்துக்கு ஆபரணமான குருகாபட்டணத்துக்கு, **முருகர்** - நிர்வாஹகரான ஆழ்வாருடைய, **நாவுக்கு** - வாக்குக்கு, **அமைந்தன** - ஸ்தோத்திரத்துக்கு விஷயமாய்க்கொண்டு இருந்ததுகள். 'என்னுவின் கவியாெனாருவர்க்குங் கொடுக்கிலேன்', 'தஹாஸிநாஸீகிநீ ** நயாவாமெஹ' இத்யாதிகளிற்படியே ஒருவருக்கும் அடையமுடியாத குணதிஶயங்களை உடைத்தாயிருந்தமை த்யோதிதம். இவர் 'துயரறு சுடரடி' என்றாரம்பித்து அடிவிடாமல் போந்தவராகையினால் அவரடியாரான நமக்கும் அவ்வடியை ஆஶ்ரயிப்பதற்கு அடியுண்டாயிற்றென்றபடி, 'சுநெஷூ ** வாஜாவ் நிக்வா மயிமஷ்ஜாதம் வஜம் ஊஃணொலயிசெஷவதம் நூ:' என்பது இங்கனுஸந்தேயம். இத்தை யடியொத்தியே பெரிய முதலியாரும் 'ஸௌரஷ்யாரி ** வாஜாஙவிநூம்' என்றருளிச்செய்தது. **வெறியுடைய** - வாஸனையுடன் கூடிய, **துளபமலர்** - திருத்துழாய்ப் புஷ்பத்தை, **வீறுக்கு** - ஸ்வோத்கர்ஷத்துக்காக, **அணிந்தன** - அலங்காரமாக்கிக் கொண்டன, **விழு** - உத்தரையின் கர்ப்பத்திலிருந்து விழுந்த, **கரி** - கரிக்கட்டை, **ஓர் குமரன்** - ஒரு பிள்ளை, **என** - என்று சொல்லும்படி, **மேவி** - அனுக்ரஹித்து, **சிறந்தன** - ப்ரகாஶித்ததுகள், 'ஹவிதொஜம்வசு வரீக்ஷதி வ' என்றிவர்தாமேயருளிச்செய்திருக்கிறபடியே கரிக்கட்டையாய் விழுந்ததை பெரிய மஹாராஜனுகும்படி க்ருபை பண்ணினதுகள் என்றபடி. **விறல்** - ஸாமர்த்யத்தையுடைய, **அசுரர்படை** - அஸுரர்களுடைய ஸேனை, **அடைய** - முழுவதும், **வீய** - நஶிக்கும்படி, **துடர்ந்தன** - பின் தொடர்ந்து சென்றன, ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்திலுள்ள ஊற்றத்தினதிஶயத்தாலே பசுவுக்காகப் புலியைத் துடர்ந்துசெல்லுங் கணக்கிலே துடர்ந்து சென்றன என்றபடி.

ஐதி யதிராஜ ஊஹாநஸவரிஊஹ
வரிவாஹவாஸிதாஂ விலைத ।
விஊாய வரிஷஜ்நிஷெவ்யாஂ
வெஷாஙொாஷய நஸஂஹஷாய ஸாூயாஂ ॥

---

இப்படிக் கீழருளிச் செய்யப்பட்ட அர்த்தங்களெல்லாம் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தங்களாகையாலே ஸம்ஸாரமாகிற மஹாக்னியினால் தாபத்தையடைந்தவர்களைக் குறித்து தம் பரமக்ருபையினால் இவைகளைத் தினந்தோறும் அனுபவியுங்கள், அம்ருதம்போல் ஆத்மோஜ்ஜீவனத்துக்குக் காரணமாகும் என்று உபதேஸித்தருளுகிறார்—'ஐதி' என்றாரம்பித்து. இது 'வாராஶயபூவவஷாூயாஂ * * ஹளஊோ: விலைஷஙாஹஂ' என்று ஸ்ரீ பாஷ்யகாரர் உபதேஸித்தாப்போலே இருக்கிறது.

ப—ரை] யதிராஜ - ஸ்ரீ பாஷ்யகாரருடைய, ஊஹாநஸ-மடப்பள்ளியிலுண்டான, வரிஊஹ - வாஸனையின், வரிவாஹ - பெருக்கினால், வாஸிதாஂ - வாஸனை உண்டாக்கப்பட்டிருக்கிற, மடப்பள்ளியாச்சானை 'ஊஹாநஸ' என்றும், அவர் விஷயத்தில் ஸ்ரீ பாஷ்யகாரருக்குண்டான க்ருபா விஶேஷத்தை 'வரிஊஹ' என்றும், அதினால் உண்டான அர்த்தோபதேஶத்தை 'வரிவாஹ' என்றும் ஆரோபித்தருளிச் செய்யப்பட்டிருக்கிறது. 'வாஸிதாஂ' என்பதினால் உவநிஷதூூஹாஜ்ஜிஊஸெஸ்யாய்யதமான கேவல ஸாூதையைக் காட்டிலும் போக்யமான அனேக த்ரவ்யங்களின் சேர்க்கையினாலுண்டான போக்யதாதிஶயம் த்யோதிதம். இத்தால் இதர ஸம்ப்ரதாயங்களைக் காட்டிலும் இந்த ஸம்ப்ரதாயத்தின் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தத்வம் அருளிச் செய்யப்பட்டதாயிற்று, விஊாய - வித்வான்களுடைய (தேவதைகளுடைய), வரிஷஜ் - ஸமூஹத்தினால், நிஷெவ்யாஂ - அனுபவிக்கக் கூடியதாயிருக்கிற, 'வநகஃஷாஷாூநஹாூஂஜீத' என்கிற ந்யாயத்தாலே ஸாத்விகர்கள் குழாங்களாய்க்கூடி அனுபவிக்கக்கூடியது என்றபடி. வெஷாநொாஷய - வேதாந்தோதயனருடைய (மடப்

கலகண்டா கணாஸ்வாத்யே காமஸ்யாஸ்த்ரே நிஜாங்குரே ।
நிம்பவ்ருத்திபிருத்கீர்ணே ந சூத: பரிதப்யதே ॥

---

பள்ளியாச்சானுடைய), ஸம்ப்ரதாயஸாரம்-ஸம்ப்ரதாயமாகிற அம்ருதத்தை, பிபத - (தினந்தோறும்) அனுபவியுங்கள். இங்கு 'ஹம்ஸா: பிபந்து' என்பதுபோலில்லாமல் பொதுவாக அருளிச் செய்திருப்பதினால் இது கேவலம் ஸம்ஸாரிகளுக்கு மாத்திரம் அனுபாவ்யமில்லை, ஸூரிகளுக்கும் போக்யதாதிஶயத்தினால் அனுபாவ்யம் என்பது த்யோதிதம். 'இமையா இமையவரேத்திய' இத்யாதி கீழ் அருளிச் செய்திருப்பது இங்கனுஸந்தேயம்.

இப்படி இது ஸர்வோத்க்ருஷ்டமாகில் எல்லோரும் ஏகமுகமாக அங்கீகரிக்காததற்குக் காரணம் என்னவென்னில்? அதற்கு ஸமாதானமாக அப்படி அங்கீகரியாதது ப்ரபந்தத்துக்கு தோஷாவஹமல்ல, அவர்களுக்கே தோஷாவஹம் என்று, உதாஹரணத்துடன் நிரூபித்தருளுகிறார்— 'கலகண்டா' என்றாரம்பித்து.

ப-ரை] கலகண்டா - குயில்களின், கண-கும்பலினால், ஆஸ்வாத்யே - புஜிக்கக்கூடியதாயும், காமஸ்ய-மன்மதனுக்கு, அஸ்த்ரே - பாணமாயுமிருக்கிற, மன்மதன் லோகங்களைத் தன் வசமாக்குவதற்குக் காரணமாயிருக்கிற என்றபடி, நிஜாங்குரே - தன்னுடைய துளிர், நிம்பவ்ருத்திபி: - வேப்பிலையை ஆஹாரமாகவுடைய ஒட்டை முதலியவைகளினால், உத்கீர்ணே - கக்கப்பட்டிருந்ததால், சூத: - மாமரம், ந பரிதப்யதே - துக்கப்படுகிறதில்லை, குயில்களை 'கலகண்டா' என்று நிரூபித்திருப்பதினால் அயலாரை ரஞ்ஜிப்பிக்கும்படி ஶப்தங்களைச் சொல்லக்கூடிய வித்வான்கள் அபிப்ரேதர்கள். 'காமஸ்யாஸ்த்ரே' என்பதற்கு ஸர்வஜனங்களினாலும் ஆசைப்படக் கூடியவனாய் அதினால 'காம: காமப்ரத:' என்று ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்தில் காமன் என்று சொல்லப்பட்ட ஸ்ரிய:பதி ஜனங்களைத் தனக்கு வஶப்படு

மூன்பெற்ற ஞானமு மோகந் துறக்கலு மூன்றுரையில்
தன்பெற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க்கீயுந் தனித்தகவும்
மன்பற்றி நின்றவகை யுரைக்கின்ற மறையவர்பால்
சின்பற்றி யென்பயன் சீரறிவோர்க்கிவை செப்பினமே.

---

த்துவதற்கு இப்ரபந்தத்தைத் தனக்கு பாணமாக வைத்திருக்கிறுன் என்பது த்யோதிதம். இத்தால் ஸாத்விக ஜனங்களுடைய ஆதரமே முக்யமானது, அஸாத்விகருடைய அநாதரவினுல் இக்ரந்தத்துக்கு யாதொரு ஹானியும் வாராது, அது அவர்களுக்கே தோஷாவஹமாகுமென்றருளிச் செய்யப்பட்டதாயிற்று.

குணத்தை க்ரஹிப்பதிலேயே இச்சையுடையவர்களுக்காக இக்ரந்தம் அருளிச் செய்யப்பட்டதாகையினுல் அஸாத்விகர்களுடைய அநாதரவு அகிஞ்சித்கரம் என்றருளிச் செய்கிறுர்— 'மூன்பெற்ற' என்றுரம்பித்து.

ப—ரை] **மூன்** - முதலிலே, **பெற்ற** - (ஆசார்யர்களுடைய உபதேசத்தினுல) அடையப்பட்ட, **ஞானமும்** - தத்வஹித புருஷார்த்தங்களைப்பற்றிய ஜ்ஞானமும், இத்தால் ஆர்த்தானுஶாஸநபாகார்த்தம் ஸங்க்ரஹீதம், **மோகம்** - அஜ்ஞானத்தின், **துறக்கலும்** - நிவ்ருத்தியும், இத்தால் ஸ்திரீகரணபாகம் ஸங்க்ரஹீதம், **மூன்றுரையில்** - ரஹஸ்யத்ரயத்தில், **தன்** - தன்னுடையதாய், **பெற்ற** - இப்பொழுது அறியப்பட்ட, **தன்மையும்** - ஸ்வபாவத்தையும், பகவச்சேஷத்வ பாரதந்த்ர்யாதிகளை யென்றபடி, இத்தால் பதவாக்யயோஜனுபாகம் ஸங்க்ரஹீதம், **தாழ்ந்தவர்க்கு** - தன்னிடத்தில் ஆஶ்ரயித்தவர்களுக்கு, **ஈயும்** - இவ்வர்த்தங்களை உபதேஶிக்கும்படியான, **தனித்தகவும்** - அத்விதீயமான க்ருபையையும், **மன்** - உறுதியாக, **பற்றி** - அவலம்பித்துக்கொண்டு, **நின்ற**, இவ்வர்த்தங்களே உபஜீவ்யங்கள் என்று ஸதா அனுஸந்தித்துக்கொண்டிருக்கும் என்றபடி, **வகை** - ப்ரகாரத்தை, **உரைக்கின்ற** - (ஶிஷ்யர்களுக்கு) உபதேஶம் செய்கிற, **மறையவர்பால்** - வைதிகர்களிடத்தில், **சின்** - கோபத்தை, **பற்றி**-

𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 𑌯𑌤𑌿𑌸𑌾𑌰𑍍𑌵𑌭𑍌𑌮𑌵𑌚𑌸𑌾
𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍌𑌵𑌨𑌂
𑌨𑌿𑌰𑍍𑌧𑍂𑌤𑍇𑌤𑌰𑌵𑌾𑌦𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌚𑌯𑌾
𑌨𑍀𑌤𑌾𑌸𑍍𑌸𑍁𑌖𑌂 𑌵𑌾𑌸𑌰𑌾𑌃 ।
𑌅𑌙𑍍𑌗𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌸𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌸𑌤𑍍𑌤𑌿𑌮𑌸𑌤𑌾𑌂
𑌗𑌰𑍍𑌵𑍋𑌪𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌪𑌿𑌤
𑌶𑍍𑌶𑍇𑌷𑌾𑌯𑍁𑌷𑍍𑌯𑌪𑌿 𑌶𑍇𑌷𑌿𑌦𑌂𑌪𑌤𑌿𑌦𑌯𑌾
𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌮𑍁𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌮𑌹𑍇 ॥

---

அடைந்து, **என் பயன்** - என்ன ப்ரயோஜனம், யதாஶாஸ்த்ரம் அநுஷ்டித்து உபதேசித்துப் போருகிற பெரியோர்களிடத்தில் கோபித்துக்கொள்வதில் என்ன ப்ரயோஜனம் என்றபடி, **சீரறிவோர்க்கு** - குணங்களை யறிபவர்களுக்கு, இதின் உத்க்ருஷ்டத்வத்தை அறியக்கூடிய ஸாத்விகதையுடையவர்களுக்கு என்றபடி, **இவை** - இந்த அர்த்தங்களை, **செப்பினம்** - சொன்னோம். இங்கு **'தன் பெற்ற தன்மையும்'** என்பதினால் திருமந்திராதிகாரார்த்தமும், **'தாழ்ந்தவர்க்கு'** இத்யாதியினால் அகிஞ்சனராய் ஆஶ்ரயிப்பவர்களுக்குப் பரம புருஷார்த்தத்தைக் கொடுப்பது என்றர்த்தமாகையினால் த்வயாதிகாரார்த்தமும், **'மன்பற்றி'** இத்யாதியினால் பகவானை ஆஶ்ரயித்து நிர்ப்பரனாய் நிற்பது ஏற்படுகிறபடியினால் சரமஶ்லோகாதிகாரார்த்தமும் ஸங்க்ரஹிக்கப்பட்டதாகிறது.

லோகத்தில் க்ரந்தங்களைச் செய்வது ப்ரஸித்தி, பஹுமானம், பணம், முதலிய ப்ரயோஜனங்களுக்காகக் காணப்பட்டிருப்பதினால் அநந்ய ப்ரயோஜனமாகச் செய்தோமென்று கீழ் 'சீரறிவோர்க்கிவை செப்பினமே' என்றருளிச் செய்திருப்பது ஸங்கதமாகுமோ வென்ன அருளிச் செய்கிறார்—'𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂' என்றாரம்பித்து.

ப—ரை] **𑌯𑌤𑌿𑌸𑌾𑌰𑍍𑌵𑌭𑍌𑌮** - ஸ்ரீ பாஷ்யகாரருடைய, **𑌵𑌚𑌸𑌾𑌂** - ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸ்ரீ ஸூக்திகளின், **𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌃** - ஆவ்ருத்திகளினால், **𑌯𑍌𑌵𑌨𑌂** - யௌவநமானது, **𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂** -

கழிக்கப்பட்டது, லோகத்தில் விஷயானுபவங்களின் ஆவ்ருத்தி களினால் கழிக்கப்படும் யௌவநம் ஸ்ரீ பாஷ்யாதி ஸ்ரீ ஸூக்தி களின் ரஸானுபவத்தினால் கழிக்கப்பட்டது என்றபடி, 'ஶ்ருவஞ்திலி:' என்பதற்கு 'த்ரிம்ஶஶாரம் ஶ்ராவிதஶாரீரக ஹாஷ்ய:' என்கிறபடியே அனேகம் தரம் ப்ரவசனங்களின் ஆவ்ருத்திகளினாலும், 'ஊடோ: விஶஞ்ஞநஹம்' என்கிறபடியே ஸ்வானுஸந்தானத்தின் ஆவ்ருத்திகளினாலும் என்று தாத்பர்யம், இத்தால் ப்ராப்த காலங்களிலும் இதர புருஷார்த்தங்களில் அந்வயமில்லாமை ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது. தேஹயாத் திராதிகளுக்காக ப்ரபுக்களுக்குப் பாரதந்திரனாயிருப்பது முதலிய தாவஶ்யகமன்றோ வென்னில்? அதுவும் தமக்கில்லை என்றரு ளிச் செய்கிறார்—'நிஃஷூத' இத்யாதியால். அன்றிக்கே இவ னால் ஜயிக்கமுடியாத சத்ருக்களென்று ஸ்ரீ பகவத்கீதாதிகளில் ப்ரஸித்தர்களான காமக்ரோதாதிகளுக்குப் பாரதந்திரனாயிருக்க வேண்டிய யௌவனத்தில் இதர புருஷார்த்தங்களில் ஆசை யில்லை என்றது அஸங்கதமன்றோவென்னில்? ஸமாதானமருளிச் செய்கிறாராகவுமாம். நிஃஷூத-போக்கடிக்கப்பட்ட, ஐதா - (பகவானைத்தவிர) மற்றவர்களுக்கு, வாரதம்த்ர - பாரதந்திர னாயிருக்கையாகிய, நிரயா: - நரகத்தை உடையதுகளான, 'ஸவஃம் வாவஶம் ஓ:வம்' என்கிறபடியே மற்றப் பாரதந்த்ர் யங்கள் நரகதுல்யங்கள் என்றபடி, வாஸரா: - தினங்கள், ஸுவம் - ஸுகமாக, நீதா:-கழிக்கப்பட்டதுகள். 'வாஸரா:' என்பதினால் ஒருநாளாகிற அல்பகாலங்கூட பாரதந்த்ர்யம் வஹி க்கவில்லை என்பது தெரிவிக்கப்படுகிறது. 'வாஸர' என்கிற பதம் மத்யாஹ்னத்தைச் சொல்லுகிறதாகவுமாம். அப்பொழுது 'நநூ த்ரூஷித ஶூதிதெ்ர நநூத்ரூஸஷிதொரவள'. என்கிறபடியே மத்யாஹ்ன காலங்களில் த்ரவ்யார்ஜனாதிகளுக்காக ப்ரபு ஸேவா திகளும், அப்படி ஸம்பாதிக்கப்பட்ட த்ரவ்யத்தைக்கொண்டு விஷ யானுபவமாகிற ஸுகானுபவம் செய்யவேண்டிய காலமாகிற ராத் திரியிலும் இதர புருஷார்த்தத்தில் அந்வயமில்லை என்று இந்தப்

பூர்வார்த்தத்தால் சொல்லப்பட்டதாகிறது. பொதுவாக 'ஊதாஶ வாஶதா த்ரூ' என்றருளிச் செய்யப்பட்டிருப்பதினால் 'மாறனார் வரிவஞ்சிலைக் காட்செய்யும் பாரினரொடும் கூடுவதில்லையான்' என்றும், 'என்னையாளும் வன்கோவோரைந்திவை' என்றும்சொல்லுகிறபடியே காமக்ரோத இந்திரியாதிகளுக்கும் பாரவஶ்யமில்லை என்பதும் அருளிச் செய்யப்பட்டதாகிறது. அவைகளுக்கு வஶப்பட்டிருக்கையே ஆத்மாவுக்கு மிகுந்த துக்கமாகையினால் 'ஸிரயா:' என்றருளிச் செய்யப்பட்டதாகிறது. பரவாதிநிரஸனம் செய்திருப்பதும் க்ரோதாதி கார்யமன்று என்றருளிச்செய்கிறார்— 'ஸமீக்ருத' இத்யாதியினால். ஸதாம்-பெரியோர்களுடைய, அநந்ய ப்ரயோஜனர்களான பரமைகாந்திகளுடைய, ஹஸதிம்-அனுக்ரஹத்தை, ஸமீக்ருத - ப்ரயோஜனமாக அங்கீகரித்துக்கொண்டு, அஸதாம்-துர்வாதிகளுடைய, மவெஃரவி-கர்வமும், நிவஃரவித: - போக்கடிக்கப்பட்டது, இத்தால் பரமத நிரஸனமும் மஹான்களுடைய அனுக்ரஹத்திற்காகச் செய்யப்பட்டபடியினால் ப்ரயோஜனாந்தர ப்ரஸக்தியில்லை என்பது த்யோதிதம். 'ஐயமற அறுசமயக் குறும்பறுத்தோம் அணியரங்கர் அடியவர்க்கே அடிமை செய்தோம்' என்றிவர்தாமேயருளிச்செய்திருப்பது இங்கனுஸந்தேயம். அன்றிக்கே ஸதாம்-பெரியோர்களுடைய, ஹஸதிம் - அனுக்ரஹகார்யமான நியமனத்தை என்றாகவுமாம், பெரியோர்கள் நியமனத்தை ஶிரஸா வஹித்துச் செய்தோம் என்றபடி, 'சுஹஜிஹ தா நியாக: ஸஜ்ஞாவாயஃநிவெ:', 'ஸஉதநாதஸதாம் வீ திஜெதாம்ஸஜெதாம்' 'வஃதிஷாவிதவெஷாஜ: வஃதிக்ஷிவவஹிஉஃத:' இத்யாதி அனுஸந்தேயம். இனி வரப்போகிற காலத்திலும் தமக்கு ப்ரயோஜனாந்தரகந்தமில்லை என்று நிரூபித்தருளுகிறார்— 'ஶேஷாயஷ்வி' இத்யாதியினால். ஶேஷாயஷ்வி- மிகுதியாயிருக்கும் காலங்களிலும், ஶேஷிஉம்வதி - ஶேஷிகளான ஸ்ரீ ஶ்ரிய:பதிகளினுடைய, ஐயா-கருணையினாலுண்டான, தீக்ஷாம் - தீக்ஷையை, 'சுஷயம் ஸவஃ ஊஃதொஹ்யா ஐஷாஜெ்த

செப்பச்செவிக்கமுதென்னத்திகழுஞ்செழுங்குணத்துத்
தப்பற்றவர்க்குத் தாமே யுகந்து தருந் தகவால்
ஒப்பற்ற நான்மறையுள்ளக்கருத்தி லுறைத்துரைத்த
முப்பத்திரண்டிவை முத்தமிழ்சேர்ந்தமொழித்திருவே.

---

ஆ_தம் ௨௨' என்கிற தீக்ஷையை என்றபடி, இத்தால் வ்ரதம் செய்யத்தவறினல் ஹாநி பகவானுக் குண்டாகுமாகையினல் தன்னைப் பகவான் ரக்ஷிப்பதில் தமக்குள்ள மஹாவிஸ்வாஸம் த்யோதிதம்; உதீக்ஷாஉஹெ - அண்ணுந்து பார்த்துக்கொண்டிருக்கிறோம், அதாவது அதிலேயே ஊற்றமுடையவர்களாயிருக்கிறோமென்றபடி. இத்தால் சாதகபக்ஷியைப்போல் இருக்கும் நிலை த்யோதிதம். 'ஸாதிய_ூம_ுஜ_ூவ' என்கிறபடியே அனேகம் திக்குகளில் அலமறவாமல் ஒரே திக்கில் நோக்கையுடைமை சொல்லப்பட்டது.

இந்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரஸங்க்ரஹப் பாட்டுக்கள் ஸர்வார்த்தஸங்க்ஹரமாயும், போக்யதமமாயும், ஸுகமாய் அர்த்தானுஸந்தானம் செய்யக்கூடியதுமா யிருக்கிறபடியினல் அவைகளின் குணதிஶயத்தை அனுஸந்தித்தவைகளின் ப்ராஶஸ்த்யத்தை அருளிச்செய்கிறர்—'செப்ப' என்றாரம்பித்து.

ப—ரை] **செப்ப** - சொல்லும்பொழுது, **செவிக்கு** - காதுகளுக்கு, **அமுது** - அம்ருதம், **என்ன** - என்று சொல்லும்படி, **திகழும்**-ப்ரகாஶிக்கிற; இது 'முப்பத்திரண்டு' என்பதற்கு விஶேஷணம், 'ஸம்ஶ_வெ ஊயூ_ாம் வாக்யம்' என்கிறபடியே அர்த்தானுஸந்தானம் செய்து ஸுகமாயிருப்பதன்றிக்கே ஶப்தம் பட்டவிடத்திலேயே அம்ருதம்போல ரஸித்திருக்கை அருளிச் செய்யப்பட்டதாகிறது. **செழும்** - ஶ்லாக்யமான, **குணத்து**-குணத்தையுடையவர்களாய், **தப்பற்றவர்க்கு**-அஸூயாதிதோஷமில்லாதவர்களுக்கு, ஸச்சிஷ்யர்களுக் கென்றபடி, **தாமே** - தாங்களே, **உகந்து** - ஸந்தோஷத்தை யுடையவர்களாய், **தரும்** - செய்கிற, **தகவால்** - க்ருபையினல் என்றபடி, ஆசார்யர்கள் செயல் நன்றாகத் திருத்திப்

ஆஸ்திக்யவாந் நிஶிததீர் நயவர்த்மவேத்தா
ஸத்த்வம் ஶ்ரத்தாய பரிபாஷ்ய ஜநாஸ்தயீ: ।
ஸங்கேததீரஹிதஸத்த்வரணேஷ்வஸக்த:
ஸ்வச்சந்தநீ ச நாவியாவஸ்யதி ஶாஶ்வதீம் ந: ॥

---

பணிகொள்ளுமவர்களாகையினுல் தங்களைப்போலவே ஸ்வாது தமமான க்ரந்தத்தைச் செய்யக்கூடிய ஶக்தியை க்ருபைசெய் தார்கள் என்று தாத்பர்யம், ஒப்பற்ற-ஸத்ருஶமில்லாத, ப்ரமாண தமங்களான என்றபடி, **நான்மறை**-நான்கு வேதங்களினுடைய, **உள்ளக்கருத்தில்** - உள்ளடக்கி வைத்திருக்கும் தாத்பர்யார் த்தத்தில், அத்யந்தகூடமான தத்வார்த்தத்தை என்றபடி, **உறைத்து** - நன்ருக ஸ்பர்ஶித்து, தத்வார்த்தங்களை விஶதமாக விஷயீகரித்து என்றபடி, **உரைத்த**-சொல்லப்பட்ட, **இவை**-இந்த, **முப்பத்திரண்டு** - முப்பத்திரண்டு பாட்டுக்களும், **முத்தமிழ் சேர்ந்த** - இயல், இசை, நாடகம், என்கிற மூன்றுவிதமான தமிழ் சேர்ந்த, **மொழித்திருவே** - ஶப்தரூபமான அலங்காரம். இந்த ப்ர பந்தத்துக்கு என்று சேர்த்துக்கொள்ளவும், அன்றிக்கே, **மொழி**-ஶப்தரூபமான இக்ரந்தத்துக்கு, **திரு** - ஶோபாகரம் என்ருகவு மாம். அன்றிக்கே ருக் யஜுஸ் ஸாமவேதங்களை யெடுத்து இவர்கள் பெரியோர்களுக்கு அழிவில்லாத ஸம்பத்துக்கள் என்று ஶ்ருதியில் சொல்லியிருப்பதை அநுஸரித்து அந்த வேதங்களின் தாத்பர்யார்த்தத்தை ப்ரதிபாதிக்கிற இவை அழிவில்லாத ஸம் பத்து என்ருகவுமாம்.

இனி வரப்போகிறகாலத்தில் கலியுக ஸ்வபாவத்தினுல் நாஸ்திக்யம் முதலியவைகள் மேற்பட்டு அதினுல் இந்த க்ரந்தத் தை ஆதரிப்பவர் இல்லாமல் போகும்படியாகுமே என்னில் அரு ளிச் செய்கிருர்—'**ஆஸ்திக்யவாநு**' என்ருரம்பித்து.

ய—ரை] **ஆஸ்திக்யவாநு** - ஆஸ்திக புத்தியை யுடையவனும், **நிஶிததீ:** - கூர்மையான புத்தியை யுடையவனும், **நய**

மறையுரைக்கும்பொருளெல்லாம்மெய்யென்றோர்வார்
மன்னியகூர்மதியுடையார் வண்குணத்தில்
குறையுரைக்க நினைவில்லார் குருக்கடம்பால்
கோதற்றமனம்பெற்றார்கொள்வார் நன்மை
சிறைவளர்க்குஞ்சிலமாந்தர் சங்கேதத்தால்
சிதையாததிண்மதியோர்தெரிந்ததோரார்
பொறைநிலத்தின்மிகும்புனிதர்காட்டுமெங்கள்
பொன்றாதநன்னெறியிற்புகுதுவாரே. 52

---

அநஸூயு: - பொறாமை இல்லாதவனும், ஸத்ஸம்ப்ரதாய பரிஶுத்தமநா: - நல்ல ஸம்ப்ரதாயத்தினால் பரிசுத்தமான மனதை யுடையவனும், ஸதர்த்தீ - நல்ல புருஷார்த்தத்தை விரும்புகிறவனும், ஸங்கேத - கட்டுப்பாட்டிலிருந்து, பீதிரஹித: - பயமில்லாதவனும், ஸத்ருணேஷு - புல்லுக்கு ஸமமான அல்ப புருஷார்த்தங்களில், அஸக்த: - ஆசை இல்லாதவனு மிருக்கிறவன், ந: - நம்முடைய, ஶாஶ்வதீம் - அழிவில்லாத, ஸத்பதவீம் - (இந்த க்ரந்தத்தில் உபபாதிக்கப்பட்ட) நல்ல மார்க்கத்தை, அநுவ்யாஸ்யதி - அனுஸரிக்கப்போகிறான்.

கீழ் ஶ்லோகத்தின் அர்த்தத்தையே விவரித்தருளுகிறார்— ‘மறையுரைக்கும்’ என்றாரம்பித்து.

ப—ரை. மறை - வேதத்தில், உரைக்கும் - சொல்லப்படும், பொருளெல்லாம் - அர்த்தங்களெல்லாம், மெய் - உண்மையானவை, என்று, ஓர்வார் - நம்பியிருப்பவர்களும். இத்தால் சில பாகங்கள் கல்பிதங்கள் எனறிவை முதலியவைகளைச் சொல்லும் மற்றவர்கள் விலக்கப்படுகிறார்கள், மன்னிய - ஸ்திரமான, கூர் - கூர்மையுள்ள, மதியுடையார் - புத்தியுடையவர்களும், வண் - விலக்ஷணமான, குணத்தில் - குணங்களில், குறை - குற்றத்தை, உரைக்க - சொல்ல, நினைவில்லார் - நினைவில்லாதவர்களும், ‘குணேஷு தோஷாவிஷ்கரண மஸூயா’ என்று சொல்லப்படுகிறபடியே அஸூயை இல்லாதவர்கள் என்றபடி, குருக்கடம்பால் - ஆசார்

இதுவழியின் னமுதென்றவரின் புலன்வேறிடுவார்
இதுவழியாமல வென்றறிவா ரெங்கடேசிகரே [பார்
இதுவழியெய்துக வென்றுகப்பா லெல்பிழை பொறுப்
இதுவழியா மறையோரருளால் யாமிசைந்தனமே. 53

யர்களிடமிருந்து, **கோதற்ற** - தோஷமில்லாத, **மனம்** - மனதை, **பெற்றார்** - அடைந்தவர்களும், **நன்மை** - நல்ல புருஷார்த்தத்தை, **கோள்வார்** - அங்கீகரிப்பவர்களும், **சிறை** - காராக்ரஹத்தை, ப்ராக்ருத ஶரீரத்தை என்றபடி, **வளர்க்கும்** - வ்ருத்திசெய்கிற, கர்மங்களினால் ப்ராக்ருதமான தேஹஸம்பந்தத்தையே மேல்மேல உண்டாக்குகிற, **சிலமாந்தர்**-அல்பபுத்தியுடைய மனிதர்களுடைய, **சங்கேதத்தால்** - கட்டுப்பாட்டினால், அதாவது ஶாஸ்திர ஸம்மதமில்லாமல் ஸ்வகல்பிதங்களான கட்டுப்பாட்டினால், **சிதையாத** - கலையாத, நல்ல ஸம்ப்ரதாயத்திலிருந்து நழுவாத என்றபடி, **திண்மதியோர்** - த்ருடமான புத்தியையுடையவர்களும், **தெரிந்து**- நல்லது, கெட்டது, என்று விவேகித்தறிந்து, **அது** - அந்த க்ஷுத்ரமான புருஷார்த்தங்களை, **ஓரார்** - (க்ரஹிக்கத் தகுந்ததென்று) நிஸ்சயிக்காதவர்களும், **பொறைநிலத்தின்** - பொறுமைக்கு ஸ்தானமான வஸ்துக்களில், **மிகும்** - உத்க்ருஷ்டரான, அன்றிக்கே பொறுமையில் பூமியைக்காட்டிலும் உத்க்ருஷ்டர்களான, **புனிதர்** - பரிசுத்தர்களான பூர்வாசார்யர்கள், **காட்டும்** - காட்டிய, **எங்கள்** - எம்முடையதான, **பொன்றாத** - நசியாத, **நன்னெறியில்** - நல்ல மார்க்கத்தில், **புகுதுவார்** - ப்ரவேசிப்பார்கள். கீழ் ஶ்லோகத்தில் அருளிச்செய்யப்பட்ட 'ஸூவ்ருவாது' இத்யாதி பதங்கள் இந்த பாட்டில்முறையே வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்பது அனுஸந்திக்கத்தக்கது.

ஸாராஸார விவேகம் செய்யும்பொழுது அனேகம் மதங்களிருக்க இதுவே ஸாரம், நன்மையுண்டாக்கக்கூடியது, என்று நிஸ்சயிக்கக்கூடுமோ வென்னிலருளிச் செய்கிறார்— 'இதுவழி' என்றாரம்பித்து.

பு—ரை] **இது** - இந்த க்ரந்தத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்குமது, **வழி** – நல்ல மார்க்கம், **இன்** - போக்யமான, **அமுது** - அம்ருதம், அமுதமென்று சொல்லப்படுகிற மோக்ஷத்துக்கு ஸாதனமாகையி ஞலும், ஸ்வயம் போக்யமாகையாலும் என்றபடி, **என்றவர்**- என்றனுஸந்தித்தவர்களாயும், **இன்புலன்** – அல்ப ஸுகமாகிய ஶப்தாதிவிஷயங்களை, **வேறிடுவார்** - (த்யாஜ்யமாகையாலே) ஸந் மார்க்கத்தைவிட வேறுபட்டதாகக் காண்பிக்கிறவர்களாயும், **இது**, **வழியாம் அல** – வழியாகக் கூடியதல்ல, மோக்ஷஸாதனமான மார்க்கமல்ல என்றபடி, **என்றறிவார்** - என்றறிபவர்களாயு மிருக்கிற, **எங்கள் தேசிகரே** - நம்முடைய பூர்வாசார்யர்களே, வகுளாபரணநாத யாமுனுதிகளே என்றபடி, ஏகாரத்தினுல் மற்ற வர்கள் விலக்கப்படுகிருர்கள், **இதுவழி** - இந்த க்ரந்தத்தில் நிரூ பிக்கப்பட்டிருக்கும் இந்த ஸந்மார்க்கம், **எய்துக** - விருத்தியடைய வேண்டும், **என்று** - என்று எண்ணி, **உகப்பால்** - ஸந்தோஷத்தி ஞல், இந்த ஸந்மார்க்கத்தை நிரூபித்ததினுல் உண்டான ஸந்தோ ஷத்தினுல் என்றபடி, **என்** – என்னுடைய, **பிழை** - குற்றங் களை, இந்த க்ரந்தத்தில் ஏற்பட்டிருக்கிற ஶப்த தோஷாதிகளை, **பொறுப்பார்** - பொறுத்துக்கொள்வார், அன்றிக்கே ஸத்ஸம்ப்ர தாயம் பரவுதற்காக என்னுடைய குற்றங்களைப் பாராமல் ஶிஷ்யனுகப் பரிக்ரஹித்து உபதேஶித்தார்கள் என்றுகவுமாம், (ஆகையினுல்) **மறையோர் அருளால்** - வைதிக ஶ்ரேஷ்டர்களான நம் ஆசாரியர்களுடைய க்ருபையினுல், **இதுவழியா** – இதில் நிரூபிக்கப்பட்டிருப்பதே ஸந்மார்க்கமாக, **யாம்** – நாம், **இசைந் தனம்** - அங்கீகரித்தோம். அதாவது ஸாராஸார விவேகம் செய்து இதுவே நல்ல வழியென்கிற நிஷ்கர்ஷம் என்னு டைய புத்தியினுலறிந்து சொல்லப்பட்டதல்ல, பூர்வாசார்யர்க ளுடைய உபதேஶத்தினுல் ஏற்பட்டது என்று தாத்பர்யம்.

இப்படி ரஹஸ்யத்ரயார்த்தங்கள் ஆசார்யோபதேஶ முகத் தாலே தமக்குக் கிடைத்ததற்குக்காரணம் பகவானுடைய ஸஹஜ

எட்டுமிரண்டு மறியாதவெம்மை யிவையறிவித்
தெட்டவொண்ணாத விடந்தருமெங்கண் மாதவனார்
முட்டவினைத் திரண்மாள முயன்றிடு மஞ்சலென்றார்
கட்டெழில் வாசகத்தால் கலங்காநிலை பெற்றனமே. 54

---

கார்ருண்யமென்று பகவானிடத்தில் க்ருதஜ்ஞதானுஸந்தானம் செய்தருளுகிறார்—'எட்டு' என்றாரம்பித்து.

ப-ரை] **எட்டு மிரண்டும்** - திருவஷ்டாக்ஷரத்தையும், த்வயத்தை யும், **அறியாத**, அன்றிக்கே எட்டும், இரண்டும், பத்து என்று கூட தெரியாத ஜ்ஞானஶூந்யரை என்றாகவுமாம், **இவையறி வித்து** - இவைகளின் அர்த்தங்களை ஆசார்ய முகத்தாலறிவித்து, **எட்டவொண்ணாத** - (அநாஶ்ரிதர்களினால்) மனதினாலும் எண்ண முடியாத, **இடம்** - பரமபதத்தை, **தரும்**-தருகிறவராயும், **முட்ட**- முழுமையும், **வினை** - பாபங்களின், **திரள்** - ஸமூஹம், **மாள** - நசிக்க, **முயன்றிடும்** - தானே ப்ரயத்னம் செய்கிறவராயும், (ஆகையினாலே), **அஞ்சல்** - நீ பயப்படாதே, **என்றார்** - என்று சொன்னவருமாகிய, **எங்கள்** - நமக்கு ஸ்வாமியான, **மாதவனார்**- ஶ்ரிய:பதியினுடைய, **கட்டு** - முழுமையும், **எழில்** - ப்ரகாசத்தை யுடைய, **வாசகத்தால்** - சரமஶ்லோகரூபமான வாக்யத்தினாலே, அன்றிக்கே லோகம், ஶாஸ்திரம், இவைகளின் கட்டுப்பாட்டினால் (ஸம்வாதத்தினால்), அதாவது அவைகளை அனுஸரிப்பதினால் ப்ர காஶித்துக்கொண்டிருக்கிறதென்றாகவுமாம், **கலங்காநிலை**-ஸம்ஶயாதி கலக்கத்தையடையாத, **நிலை**–ஸ்திதியை, **பெற்றனம்**-அடைந்தோம். அன்றிக்கே இந்தப்பாட்டு ஆசார்யர்களுடைய உபகாரத்தை அனுஸந்திக்கிறதாகவுமாம். அப்பொழுது திருமந்திரம், த்வயம், இவைகளையும், '**எட்டவொண்ணாத * * அஞ்சல்**' என்று சரம ஶ்லோகத்தின் அர்த்தத்தையும் நமக்கு உபதேஶம் செய்த ஆசார்யர்களுடைய ஸகல ஶ்ருதீதிஹாஸபுராணாதிகளுக்கு அனு குணமான ஸ்ரீ ஸூக்திகளினால் நிஸ்ஸம்ஶயமான ஸ்திதியைப் பெற்றோம் என்று தாத்பர்யம்.

வானுள மர்ந்தவருக்கும் வருந்தவரு மிந்நிலைகள்
தானுள னுயுகக்குந் தரமிங்கு நமக்குளதே
கூனுள நெஞ்சுகளாற் குற்றமெண்ணி யிகழ்ந்திடினும்
தேனுள பாத மலர்த்திருமாலுக்குத் தித்திக்குமே. 55

இனி இந்த ஸம்ப்ரதாயத்தின் போக்யதையை அநுஸந்தித்து இதை யறியாமல் மற்றவர்கள் அலக்ஷியம் செய்தாலும் இந்த க்ரந்தம் பகவானுக்கு மிகவும் த்ருப்திகரம் என்றருளிச் செய்கிறார்—'வானுள்' என்றாரம்பித்து.

ப—ரை] **வானுள்** - பரமபதத்தில், **அமர்ந்தவருக்கும்** - வஸிக்கும் நித்யஸூரிகளுக்கும், **வருந்தவரும்** - ப்ரயாஸப்பட்டுவருகிற, நித்ய ஸூரிகளுக்கும் பரார்த்தித்து அடையவேண்டியதாயிருக்கிற என்றபடி, **இந்நிலைகள்** - இந்த க்ரந்தத்தில் சொல்லப்படுகிற ஸ்வரூபோபாய புருஷார்த்த நிஷ்டைகள், 'ஸூரிபிஸ்ஸதைவ ஸமா ஶாஸநதாஸ:' என்று கீழருளிச் செய்யப்பட்டிருப்பதிங்கநுஸந்தேயம், **இங்கு** - இந்நிஷ்டைகளுக்கு விரோதிகள் நிறைந்திருக்கும் இந்த ஸம்ஸாரமண்டலத்திலேயே, **உளனாய்** - உள்ளவனாய், இந்த நிலைகளையுடையவனாய் என்றபடி, **தான்** - தானே, **உகக்கும்** - ஸந்தோஷப்படுகிற, **தரம்** - உத்கர்ஷம், **நமக்கு** - ஸம்ஸாரிகளான நமக்கு, **உளதே** - இருக்கிறதே. இந்த ஏகாரம் நிஶ்சயத்தைக் காட்டுகிறது, 'சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே', 'இழிபட்டோடு முடலினில் * * கவியமுதநுகர்ச்சி யுறுமோ முழுதுமே' இத்யாதிகளிங்கநுஸந்தேயம. **கூனுள** - வக்ரதையுடைய, வக்ரஸ்வபாவமுள்ள என்றபடி, **நெஞ்சுகளால்** - மனதுகளினால், **குற்றமெண்ணி** - தோஷத்தை (ஆரோபணம் செய்து) அநுஸந்தித்து, **இகழ்ந்திடினும்** - இப்ரபந்தத்தை அநாதரவு செய்தபோதிலும், குடிலபுத்தியையுடையவர்கள் அநாதரவு செய்தாலும் என்றபடி, **தேனுள**-தேன் எப்பொழுதும் இருக்கும்படியான, **பாதமலர்**-தாமரைப் புஷ்பத்துக்கு ஸத்ருஶமான திருவடிகளையுடைய, 'உன்தேனே மலரும் திருப்பாதம்', 'தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே' என்கிறபடியே, அன்றிக்கே 'ஹுணத

வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் விரகாலடியோம்
உள்ளத் தெழுதிய தோலையி லிட்டனம் யாமிதற்கென்
கொள்ளத் துணியினும் கோதென் றிகழினுங் கூர்மதியீர்
எள்ளத்தனை யுகவாதிகழா தெனெழின்மதியே. 56

---

ஸாரகிரீடப்ராஜதேநாரமோ விமலிதசேகரநாஸ்ய வாதார விநாகிய’ என்றாகவுமாம், **திருமாலுக்கு** - ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுக்கு, **தித்திக்கும்** - இப்ரபந்தம் மதுரமாகத் தோன்றும். இத்தால் அவன் திருவடிகளில் தேன் வெள்ளமெடுத்துப் பெருகுகிறபடியினால் போக்யவஸ்துக்களெல்லாவற்றிலும் உத்க்ருஷ்டன் அவனுக்கிது மதுரமாய்த் தோன்றுமென்றால் இதினுடைய மாதுர்யாதிஶயம் ஸர்வோத்க்ருஷ்டம் என்பது கைமுதிகந்யாயஸித்தம் என்று திருவுள்ளம். ஸர்வதேவ நமஸ்க்ருதனான பகவானுக்கு இது போக்யமாகையினால் மற்றவர்களின் அநாதரவு அநாதரணீயம் என்று தாத்பர்யம்.

இக்ரந்தத்தை சிலர் ஆதரிப்பதும், சிலர் அநாதரிப்பதும் தம்முடைய ஹர்ஷ ஶோகத்துக்குக் காரணமாகாது என்றருளிச் செய்கிறார்—‘**வெள்ளை**’ என்றாரம்பித்து.

ப–ரை] **வெள்ளை**- ‘ஶங்கஸ்படிகமணி ஸஹஸ்ர ப்ரதிஷ்டம்’ என்கிறபடியே வெளுத்த நிறமுள்ள, **பரிமுகர்** - ஸ்ரீ ஹயக்ரீவன், **பரி** - குதிரை, அதின் முகம்போன்ற முகத்தையுடையவர் என்றபடி, **தேசிகராய்** - ஆசார்யரூபியாய், **விரகால்** - உபாயத்தினால், அதாவது ‘யஸ்ராவஸளஹஜதே’ இத்யாதி கீழருளிச்செய்தபடியே தாமானதசையில் நமமை உஜ்ஜீவிப்பிக்க முடியாமல் இந்த ஆசார்யரூபமாய் திருவவதரித்தருளி நம்மை வசீகரிக்கும்படியான அனேக சூழ்ச்சிகளைச்செய்து என்றபடி, ‘பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து போதில் கமலவன்னெஞ்சம் புகுந்துமென் சென்னித்திடரில் பாதவிலைச்சினை வைத்தான்’ என்பதிங்கனுஸந்தேயம, **அடியோம்** - ‘ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம்

வ்ருவனும்' என்கிறபடியே திருவடிகளை யாஸ்ரயித்த நம்முடைய, உள்ளத்து - மனதில், எழுதியது-எழுதின அர்த்தங்களை, ஓலையில்-பத்ரத்தில், யாம், இட்டனம்-எழுதி வைத்தோம், (ஆகையினால்) இதற்கு - இப்ரபந்தத்திற்கு, என் - என்ன தோஷமுண்டு, மனுஷ்ய புத்தியினால் செய்யப்பட்டதாயின் ப்ரமம் ப்ரமாதம் முதலிய தோஷங்கள் சொல்லலாம், ஸர்வஜ்ஞனால் அருளிச் செய்யப்பட்டபடியினால் ஒருதோஷமும் சொல்லமுடியாது என்றபடி, அன்றிக்கே யாம், இதற்கு, என் - என்ன, எவ்வித ஸம்பந்தத்தை யுடையோம் என்றபடி, கொள்ள - இதை அங்கீகரிக்க, துணியினும் - விஸ்வாஸம் செய்தாலும், இதுவே பரமார்த்தமென்று அங்கீகரித்தபோதிலும், கோது - அஸாரம், என்று, இகழினும் - அநாதரித்தாலும், கூர்மதியீர் - ஸூக்ஷ்மமான புத்தியையுடையவர்களே, என் - என்னுடைய, எழில் - ப்ரகாசத்தை உடைய, நிஸ்சயத்தையுடைய என்றபடி. 'ஶ்ருதி ஶ்ரேணீ ஶுத்தாவதவ ஹூதே லக்ஷணசிதே ஸ்வவக்ஷஸ்யாஸங்கே தோஷாநுவிதய சிதி ஶாஶாவ்யதி யஃ ஸ்வஹஸ்தைர்ந்ஶக்ஷிப்தைஃ ஸவஶ்ரீநிஜஶர்தீர்த்ருஷ்ட ப்ரஹ்மஜம் ஶஶிஜம்பாஶிஷஃ ஶஶநதஶஷீர்ஷம்வதி ஜநஃ॥' என்கிறபடியே ஸர்வேஸ்வரனாலே ப்ரவர்த்திககப்பட்டதாகையினாலே நிர்துஷ்டமான இப்ரபந்தத்தில் சிலர் தோஷாரோபணம் செய்தாலும் ஆகாசத்தில் சேறு பூசுவதற்காக சேற்றை எறிவதினால் தோஷாரோபணம செய்ய எத்தனித்தவர்களுக்கே தோஷம் உண்டாகிறது என்றிருக்கிற நிஸ்சயத்தையுடைய என்னுடைய புத்தி என்று தாத்பர்யம், அன்றிக்கே இது பகவானால் செய்யப்பட்டது என்கிற நிஸ்சயத்தையுடைய என்னுடையபுத்தி என்றுகவுமாம், எள்ளத்தனை - எள்ளளவும், கொஞ்சமும் என்றபடி, உகவாது - (க்ரஹித்தார்களென்று) ஸந்தோஷப்படாது, இகழாது - (அநாதரித்தார்களென்று) துக்கப்படாது, ஆரேனுமொருவர் செய்த ப்ரபந்தத்தை ஆரேனும் ஒருவர் அநாதரித்தால் வேறொருவருக்கு துக்கமுண்டாகாது என்னுமிடம் ஸூக்ஷ்மபுத்தியுடையவர்களான உங்களுக்குத் தெரிந்திருக்குமே

ரஹஸ்யத்ரயஸாரோऽயம் வேங்கடேஶ விவர்த்திதா ।
ஶரண்யம் ஭வதி விதாம் ஸம்ப்ரதாயப்ரவர்த்தக ‖

இதி ஶ்ரீகவிதார்க்கிக ஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஶ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரே
நிகமநாதிகாரஷ்ஷட்த்ரிம்ஶ:.
ஸம்பூர்ணஶ்சாயம் க்ரந்த:

‖ ஶ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரஸ்ஸம்பூர்ண: ‖

‖ ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம: ‖

சீரார்தூப்புற்றிருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணஶாலிநே ।
ஶ்ரீமதே வேங்கடேஶாய வேதாந்தகுரவே நம: ‖

என்று 'கூர் மதியீர்' என்கிற ஸம்புத்திக்குத் தாத்பர்யம். 'என்னேழில்மதி' என்பதினால் இப்ரபந்தகர்த்தாவான ஶ்ரிய:பதி இதை ஆதரித்தவர்களிடத்தில் க்ருபையையும், அநாதரித்தவர்களிடத்தில் நிக்ரஹத்தையும் செய்தருளும் என்பது த்யோதிதம்.

இப்ரபந்தத்துக்குப் பகவானே கர்த்தாவென்றும், 'ஓலையிலிட்டனம்' என்பதினால் எழுதுவதில் தான் கர்த்தாவாயிருந்தபோதிலும் அதுவும் தன்னுடைய அந்தர்யாமியான பகவானால் செய்விக்கப்பட்டபடியினால் அதில் ஸ்காலித்யாதிகள் ஸம்பவிக்காதென்றும் அப்படி ஏதாவது தப்பிதங்கள் நேரிட்டிருந்தபோதி

லும் இதில் ப்ரதிபாதிக்கப்படுகிற உபாயோபேயதசைகளிலும் ஶ்ரிய:பதியின் திருவடிகளே உபஜீவ்யமென்கிற அர்த்தம் ஸ்ரீமந்நாத யாமுன ப்ரப்ருதிகளான பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்துக்கு உகந்ததாகையினாலே, அர்த்த கௌரவத்தினால் அவர்கள் அங்கீகரிப்பார்கள் என்றுமருளிச் செய்துகொண்டு ப்ரபந்தத்தை நிகமனம் செய்தருளுகிறார்—'ரஹஸ்யத்ரய' என்றாரம்பித்து. மேலும் 'திருமாலுக்குத் தித்திக்குமே' என்று பலத்யாகமும், 'யாமிதற்கென்' என்று மமதா த்யாகமும் கீழருளிச் செய்யப்பட்டது. இந்த ஶ்லோகத்தில் கர்த்ருத்வத்யாகத்தை அருளிச் செய்கிறார்.

ப-ரை] அயம் - இந்த, ரஹஸ்யத்ரயஸார: - ரஹஸ்யத்ரயங்களின் ஸாரதமமான அர்த்தம், இதின் போக்யதாதிஶயத்தாலே அடிக்கடி தம் திருவுள்ளத்திலனுஸந்தானம் செய்வதைக் குறிக்கிறது 'அயம்' என்கிறபதம், உபக்ரமத்திலும் இப்படியே அருளிச்செய்திருப்பது இங்கனுஸந்தேயம், வேங்கடேஶவிபஶ்சிதா - ஸ்ரீ வேங்கடேசன் என்கிற திருநாமத்தையுடையவராய் பரிபூர்ணமான ஜ்ஞானத்தையுடைய ஆசார்யனால், அன்றிக்கே திருமலையில் நின்றருளிவனாய் விபஶ்சித் என்று ஶ்ருதியில் சொல்லப்பட்ட பரமாத்மாவினால் என்றாகவுமாம், விபஶ்சிதாகிய ப்ரும்மத்துடன் என்று உபநிஷத்தில் சொல்லியிருப்பதை 'ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே' என்று வேங்கடத்தெந்தை விஷயத்தில் உபஸம்ஹாரம் செய்திருப்பது இங்கு விவக்ஷிதம், அதுவுமன்றிக்கே வேங்கடேசனென்று வேங்கடநல்வெற்பனைச் சொல்லி, 'விபஶ்சித்' என்று ஸர்வதந்திர ஸ்வதந்திரரான தம்மை அருளிச் செய்தாராகவுமாம். அப்பொழுது 'அன்றிவ்வுலகினையாக்கி', 'வேங்கடேஶாவதாரோயம்' இத்யாதிகளிற்படியே திருவேங்கடமுடையானுடைய அவதாரமாகிய இவ்வாசார்யன் என்று தாத்பர்யம், ஶரண்ய-சரணமாக ஆஶ்ரயிக்கத்தகுந்த, தம்பதி - எம்பெருமானையும் பிராட்டியையும், விதாம்-அறிந்தவர்களுக்கு: அதாவது எந்தத் தசையிலும் ஒருமிதுனமே

உத்தேச்யமென்றிருக்கும் ஸ்ரீ சடகோபநாதயாமுன ப்ரப்ருதிகளுக்கு, ஸம்மத:-பஹுமததமாக, திருவுள்ளமுகக்கும்படியாக என்றபடி, இத்தால அல்பஜ்ஞர்களான மற்றவர்களுடைய அநாதரவும், ஆதரவும் அகிஞ்சித்கரம் என்பது த்யோதிதம், ஶிஷ்டாஶிக்ஷிதபாஷ்யா: ஶ்ருதிவிதயோ யேஷாம் ஸமம் ஸேவந: தத்ஸந்தோஷஸமக்ஷமிதம் ஸாதம் பரைரை: கிம் பரை: என்றிவர்தாமே யருளிச் செய்திருப்பது இங்கநுஸந்தேயம், ஸம்க்ரஹேண - ஸங்க்ரஹேண அருளிச் செய்யப்பட்டது.

இத்தம் ஸத்ஸம்ப்ரதாயாம்ருதநிதிமரீர
ஸ்ரீநிவாஸார்ய ஸத்தாயம்
ஸ்ரீமத்வாஸராமாநுஜமுநிதிருவேங்கா
தெவவாண்யா மஹாணீஶ: ।
தாம் வ்யாவ்யாம் ஶ்ராவிலோகத்யாதமதாயு
கருணாவாத்ருதா மாத்ருயந்ய:
காலெஷவீக்ஷரோவீக்ஷவதிவாஸநியுய
ஸ்ரீந்ருஸிம்ஹாவ்ய மாஸ: ॥

ரஹஸ்யத்ரயஸாரஸ்ய வ்யாவ்யா விரசிதா ஶுபா ।
யயா ஶ்ருதப்ரவசநே தத்வெஸ்வ அாஷபெஶ மயா ॥

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
ஸ்ரீ உப. வே. நாஸிம்மாசார்ய ஸ்வாமிகளினுல்
செய்யப்பட்ட

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யானத்தில்
நிகமநாதிகாரம் முற்றிற்று.

---

ஸம்ப்ரதாய ப்ரக்ரியாபாகம் முற்றிற்று.

---

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்
முற்றிற்று.

|| श्रीः ||

|| श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ||

# ப்ரமாணங்களின் ஸங்க்ரஹம்.

# ப்ரமாணங்களின் அகராதி.

---

S. V. & CO., MADRAS.

# ப்ரமாணங்களின் அகராதி.

த

𑌧



𑌨

